KALKI
10.1.88
ரூ. 2.

# கல்கி





புகைப்படம்: போஸ்.

# இசை அரசிக்கு ஒரு சிறப்பு மலர்

ஒரு புத்தக வெளியீட்டு விழாவில் கட்டு பிரிக்கப்பட்ட உடனேயே கொண்டு வரப்பட்ட அத்தனை புத்தகங்களும் விற்றுப் போய்விட்ட அதிசயம் இந்த ஆண்டு மியூஸிக் அகாடமியில் மட்டுமே நடந்திருக்க முடியும். அந்தப் புத்தகம் "இசை அரசி எம்.எஸ்." என்ற தலைப்பில் அகாடமி வெளியிட்டுள்ள சிறப்பு மலர்.

சென்னை மியூஸிக் அகாடமிக்கும் எம். எஸ்ஸுக்கும் இடையே உள்ள நீண்ட காலத் தொடர்பு கர்நாடக இசைச் சரித்திரத்தில் இடம் பெறும் ஒன்று. 1933 முதலே எம். எஸ். அகாடமியில் கச்சேரிகள் செய்து வந்திருக்கிறார். அகாடமியின் வளர்ச்சிக்கும் அதன் கட்டட நிர்மாணத்துக்கும் எம். எஸ்ஸின் பல உதவிக் கச்சேரிகள் நிதி வழங்கியுள்ளன. இந்த ஆண்டு அகாடமி இசை விழாவை ஆரம்பித்து வைத்தவரும் எம். எஸ்.தான். "இசையின் பண்பு, பயன், நோக்கம் எல்லாமே பக்திதான்" என்று வலியுறுத்திப் பேசிய அவர், கூடவே, "வித்வத் சபையின் படிப்படியான வளர்ச்சியை உடன் இருந்து கண்டு மகிழ்ந்தவள் நான்" என்றும் சொன்னார். இந்தச் சங்கீத கலாநிதியை மீண்டும் ஒருமுறை கௌரவிக்கும் முகமாக அகாடமி இந்த மலரை வெளியிட்டுப் பெருமை அடைந்திருக்கிறது.

மலரில் எழுத்துக்கு மிகக் குறைவாகவும் புகைப்படங்களுக்கு மிக அதிகமாகவும் இடம் ஒதுக்கியிருப்பது வரவேற்கத்தக்கது. ஏனெனில் எம். எஸ்ஸைப் பற்றி எழுதுவது என்று ஆரம்பித்தால் எதைச் சொல்வது எதை விடுவது என்ற பிரச்னை எழும். அவரது வாழ்க்கை வரலாறு பல நூறு பக்கங்களைக் கொண்ட கனமான நூலாக உருவம் பெற வேண்டிய சங்கீத சரித்திரம் என்பதை உணர்ந்ததால்தான் இம்மலரில் புகைப்படங்களையே பெரும்பாலும் பேச விட்டிருக்கிறார்கள். அவைதாம் எத்தனை அற்புதமாகத் தம் பணியை நிறைவேற்றுகின்றன! எத்தனை எத்தனை வரலாற்று நிகழ்ச்சிகளைச் சொல்கின்றன! அந்த ஒவ்வொரு நிகழ்ச்சியின் பின்னணியிலும் உள்ள எத்தனை எத்தனை சம்பவங்களை நினைவூட்டுகின்றன! எம். எஸ்ஸின் வாழ்க்கை வரலாறு, விரிவாக எழுதப்படுவதை இனியும் தாமதிக்கக் கூடாது; தக்க ஒருவரைத் தேர்வு செய்து அவரிடம் சதாசிவம்—எம். எஸ். தம்பதி அந்தப் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும் என்று இந்தப் புகைப் படங்கள் வலியுறுத்துகின்றன.

இந்தப் புகைப்படங்களிலேயே மிக அபூர்வமான ஒன்றைத் தனித்துக் குறிப்பிட வேண்டும். அது ஒரு குரூப் போட்டோ. அதில் ஒரு தலைமுறையைச் சேர்ந்த, கொடி கட்டிப் பறந்த புகழுடன் விளங்கிய, பதினாறு கர்நாடக இசை மேதைகளைக் காண்கிறோம்! அவர்களுடைய இசையைக் கேட்கும் பாக்கியம் செய்தவர்களுக்கு இந்தப் புகைப்படத்தைப் பார்த்தாலே மெய்சிலிர்க்கும். இடது கோடியில் எம். எஸ்ஸில் தொடங்கி, வலது கோடியில் பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் வரை உள்ள இந்த ஒரு படத்துக்காகவே இந்த மலரை வாங்கிப் பொக்கிஷமாகப் பாதுகாக்கலாம் எனில், எம். எஸ்ஸின் லட்சோப லட்சம் ரசிகர்களுக்கோ ஒவ்வொரு புகைப்படமுமே பொக்கிஷம்தான்!

எம். எஸ்ஸின் கொடையுள்ளத்துக்குச் சான்றாக — சான்று தேவையெனில் — அவர் வழங்கியுள்ள உதவிக் கச்சேரிகளின் மிக நீண்ட பட்டியல் ஒன்று இந்த மலரில் பொடி எழுத்துக்களில் மூன்று பக்கங்களை நிரப்புகிறது. (ஒவ்வொரு பெரிய பக்கத்திலும் இரண்டு பத்திகள்!)

கடைசிப் பக்கத்தில் ஓர் இனிய ஆச்சரியம்: சதாசிவத்துக்கு எண்பத்தோரு வயது நிறைந்த போது இந்தியன் ரிவ்யூ பத்திரிகையில் அவரைப் பற்றி எழுதப்பட்ட ஒரு கட்டுரை. எம். எஸ். மலரில் அவரையும் அவர் இசையையும் வளர்த்து உலக அரங்கில் ஒப்பற்ற ஒருவராக அவர் விளங்க ஆக்கமும் ஊக்கமும் அளித்த கணவர் சதாசிவத்தைப் பற்றிய ஒரு மதிப்பீடும் இடம் பெறுவது ரொம்பவும் பொருத்தமானதே. சதாசிவத்தின் தனித்தன்மைகளையும், சிறப்புகளையும், சாதனைகளையும் அந்தச் சிறு கட்டுரை பளிச்சென்று எடுத்துக் காட்டுவதோடு இந்த அபூர்வ தம்பதி எப்படி ஒருவர் வாழ்க்கையை மற்றவர் பூரணத்துவம் அடையச் செய்தனர் என்பதையும் அழகாக உணர்த்துகிறது.

# வெங்சர்க்கார் வெல்வாரா?



சென்னை டெஸ்ட் நெருங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில், 'வெங்சர்க்கார் வெல்வாரா?' என்ற கேள்வி எல்லார் மனத்திலும் எழுந்த வண்ணம் இருக்கிறது. இங்கே கல்கி சார்பாக வெங்சர்க்காரைப் பிரத்தியேகப் பேட்டி கண்டு பம்பாயிலிருந்து எழுதுகிறார் 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' சுந்தர்ராஜன்:

**மி**குந்த கூச்ச சுபாவம் உள்ள திலீப் பல்வந்த் வெங்சர்க்கார் அதிகம் பேச மாட்டார்; அவருக்குப் பதில், கிரிக்கெட் மைதானத்தில் அவர் ஆற்றியுள்ள சாதனைகள்தான் பேச வேண்டும். சில சக ஆட்டக்காரர்களைப் போல் அவர் சர்ச்சைகளில் ஈடுபட்டு, விவகாரங்களில் மாட்டிக் கொண்டதுமில்லை; அதனால் அடிக்கடி செய்தித்தாள்களில் தமது பெயர் வரப்பெற்று, அதன் மூலம் 'புகழடைந்ததும்' இல்லை. இருப்பினும், அவர் இந்தியாவின் முன்னணி பாட்ஸ்மன் என்பதிலும் உலக பாட்டிங் அரங்கிலும் ஒரு தனியிடம் பெறுகிறார் என்பதிலும் சந்தேகமேயில்லை.

மேலோட்டமாகக் கவனித்தால்கூட, வெங்சர்க்காரின் சாதனைகள் பல, சுனில் காவஸ்கரின் சாதனைகளுக்கு நிகரானவை என்பதை உணரலாம். ஆனால் அந்த முன்னாள் இந்திய காப்டனைப் பெயரும் புகழும், பெருமைகளும், பரிசுகளும் தேடி வந்ததைப் போல் வெங்சர்க்காரைத் தேடி வந்ததில்லை. அதற்குக் காரணம் அவருடைய அடக்கமான

சுபாவம்தான்.

இரிக்கெட்டின் தலைநகராகக் கருதப்படும் லார்ட்ஸ் மைதானத்தில், (இங்கிலாந்து) மூன்று முறை தொடர்ந்து சதம் எடுத்து உலக சாதனை புரிந்துள்ள பெருமை வெங் சர்க்காருக்கு உண்டு. 'சாதனை திலகமாக'க் கருதப்படும் காவஸ்கர்கூட வெங்சர்க்காருக் குப் பிறகுதான் அச்சாதனையைப் புரிந்தார். டெஸ்ட் பந்தயங்களில் காவஸ்கருக்கு அடுத்தபடியாக அதிகப்படி ரன்களை (ஆறு யிரத்துக்கும் மேல்) எடுத்துள்ள இந்திய ஆட்டக்காரர் வெங்சர்க்கார்தான். 90 டெஸ் டுகளில் ஆடி 6627 ரன்கள் எடுத்துள்ள வெஸ்ட் இண்டீஸ் அணித் தலைவர் விவியன் ரிச்சர்ட்ஸின் சாதனையோடு ஒப்பிடும் போது; 97 டெஸ்டுகளில் 6154 ரன்கள் எடுத்துள்ள வெங்சர்க்காரின் சாதனையைக் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது.

ஆனால், இந்தத் தனிப்பட்ட சாதனைகளைக் காட்டிலும் மிக முக்கியமானது என்ன வென்றால், வெங்சர்க்கார் ஒவ்வொரு முறை யும் எடுத்த ரன்கள் இக்கட்டான நேரத்தில் இந்தியாவுக்குக் கை கொடுத்துள்ளன என் பதுதான். நடந்து வரும் தொடரில், வெஸ்ட் இண்டீஸுக்கு எதிரான முதல் டெஸ்டில், இந்தியா முதல் இன்னிங்ஸில் எழுபத்தைந்தே ரன்கள் எடுத்துக் கேவலமாக ஆல் அவுட் ஆகிவிட்டது. இரண்டாவது இன்னிங்ஸில் வெங்சர்க்கார் அடித்த அற்புதமான சதம் தான் டெஸ்டின் போக்கையே மாற்றி, இந் தியா வெற்றி பெறுவதற்குக் கூட வாய்ப்பு இருக்கிறது என்னுமளவுக்குச் சூழ்நிலையை மாற்றியமைத்தது. இரண்டாவது டெஸ்டில் மீண்டும் வெங்சர்க்கார்தான், பாட்டர்ஸன், வால்ஷ், டேவிஸ் ஆகியோரின் புயல்போன்ற பந்து வீச்சைத் தாக்குப் பிடித்து, ஆட்ட மிழக்காமல் நாற்பது ரன்கள் எடுத்து, இந்தி யாவைத் தோல்வியிலிருந்து காத்தார்.

கடந்த கிரிக்கெட் சீசனில் இலங்கைக்கு எதிராக இந்தியா கட்டாக்கில் விளையாடிய போது, பிட்ச் பந்தைப் பயங்கரமாக எழும் பச் செய்து கொண்டிருந்தது. எல்லா ஆட் டக்காரர்களும் வரிசையாக ஆட்டமிழந்த போதிலும் வெங்சர்க்கார் மட்டும் நிலைத்து நின்று சதம் எடுத்தார். இந்தப் பந்தயத்தின் முதல் இன்னிங்ஸிலும் சரி, இரண்டாவது இன்னிங்ஸிலும் சரி, இலங்கை ஆட்டக் காரர்களின் மொத்த ரன்கள் வெங்சர்க்கார் ஒருவர் எடுத்த ரன்களை எட்ட முடியவில்லை! ஆனால் இந்தப் பந்தயத்தில் 'மான் ஆஃப் தி மாட்ச்' விருது வழங்கப்பட்டது கபில் தேவுக்குத்தான் — டெஸ்ட் பந்தயங்களில் அவர் தமது முந்நூறாவது விக்கெட்டை எடுத்துச் சாதனை புரிந்ததற்காக! வெங்சர்க் காரின் சாதனைகளுக்கு, உரிய பாராட்டும் அங்கீகாரமும் தரப்படவில்லை என்பதற்கு இது ஒரு சான்று.

இப்போது தலைமைப் பதவி என்ற புதிய பொறுப்பு தரப்பட்டுள்ள வெங்சர்க்காரை எதிர்நோக்கியுள்ளது இந்திய அணியின் கௌரவத்தைக் காப்பாற்றும் கடுமையான பணி! பதினெட்டு ஆண்டுகளாய் இந்திய



அணிக்குப் பக்கபலமாக இருந்து, வேகப் பந்து வீச்சாளர்களைத் துணிச்சலுடன் எதிர் கொண்ட காவஸ்கர் ஓய்வு பெற்றுவிட்ட தால் இப்பணியின் கடுமை அதிகரித்துள்ளது.

இந்தச் சூழ்நிலையில் வெங்சர்க்கார் என்ன கருதுகிறார்? அவரிடமே பேசுவோம்:

கே: காப்டன் பதவி வகிப்பது பற்றி...?

ப: பெரிய கௌரவம். எனக்கு மகிழ்ச்சி தான்.

கே: கூடுதலான பொறுப்பு, சுமையாக இல்லையா?

ப: சுமையென்று சொல்ல மாட்டேன். மிகப் பெரிய பொறுப்புதான் என்றாலும் இந்தச் சவாலை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். இந்தப் பெரும் பொறுப்பு இதுவரை என் ஆட்டத்தைப் பாதிக்கவில்லை; தூக்கத்தையும் கெடுக்க வில்லை!

கே: இந்தப் பொறுப்பை ஏற்கும் முன் உள்நாட்டுப் பந்தயங்களில் தலைமை ஏற்ற அனுபவம் கூட குறிப்பிடும்படியாக ஏதும் உங்களுக்கு இல்லையே...?

ப: அது உண்மைதான். காரணம், வருஷக் கணக்காக ஒரே அணிக்கு நான் ஆடிக் கொண்டிருப்பதே. பம்பாய் அணி, இந்திய அணி ஆகிய இரண்டுக்குமே காவஸ்கர்தான் காப்டனாக நீண்ட காலம் இருந்தார். பிறகு இந்திய அணியின் தலைமை கபில்தேவிடம் தரப்பட்டது...

கே: இதுவரை இந்தத் தொடரில் ஆடிய பந்தயங்களில் இந்தியாவுக்கு வெற்றி எட் டாக் கனியாகவே இருந்திருக்கிறதே...?

ப: அதற்கு அதிர்ஷ்டமின்மை ஒரு கார



ணம் என்று நான் நினைக்கிறேன். டெல்லி டெஸ்டில் முதல் இன்னிங்ஸில் எழுபத்தைந்து ரன்களே எடுத்தாலும் இரண்டாவது இன்னிங்ஸில் சமாளித்துக் கொண்டு, தோல்வியைத் தவிர்த்ததோடு வெற்றிக்குக் கூட இடமுண்டு என்று நம்பும் வகை செய்தோம். ஆனால் வெற்றி கிட்டவில்லை. நாக்பூரில் நடந்த ஒரு நாள் பந்தயத்தில் வெஸ்ட் இண்டீஸை ஏழு விக்கெட் இழப்புக்கு 128 ரன்கள் என்ற நெருக்கடி நிலைக்குக் கொண்டு போனோம். பிறகு கபிலும் ரவி சாஸ்திரியும் வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தபோது, வெற்றிப் பாதையில் செல்வதாகவே தோன்றியது. அதற்குப் பிறகு கிரன் மோரே நமது நம்பிக்கையைத் தூண்டினார். ஆனால் இறுதியில், பத்தே ரன்கள் வித்தியாசத்தில் தோற்றுப் போனோம்.

கே: வெற்றி வாய்ப்புக்களைச் சாதகமாக்கிக் கொள்ளும் திறமை நமது ஆட்டக்காரர்களுக்கு இல்லாதது ஏன்?

ப: இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது கஷ்டம். டில்லியில் நமது சுழல் பந்து வீச்சாளர்கள் கை கொடுக்கவில்லை; நாக்பூரில் நமது ஆரம்ப ஆட்டம் படுமோசமாக இருந்தது... வெஸ்ட் இண்டீஸ் ஒரு வலிமை வாய்ந்த அணி என்பதை நாம் மறுப்பதற்கில்லை. மேலும் அவர்கள் சதா சர்வகாலமும் தங்கள் ஆட்டத் திறமையை அபிவிருத்தி செய்து கொண்டேயிருக்கிறார்கள்.

கே: நீங்கள் எப்படி வேகப் பந்து வீச்சை எதிர்த்து இவ்வளவு சிறப்பாக ஆடுகிறீர்கள்?

ப: சவால்களை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். வேகப் பந்து வீச்சாளர்கள் என் முழுத் திறமையையும் வெளிக் கொணர்கிறார்கள்.

கே: சுழல் பந்து வீச்சைவிட வேகப் பந்து வீச்சை எதிர்த்து ஆடுவதுதான் கடினமா?

---

**இக்கட்டுரை அச்சேறிய தினத்தில், வெங்சர்க்கார் கல்கத்தா டெஸ்டில் சதம் கண்ட கையோடு, இடது கையில் அடிபட்டதால், ஆட்டத்திலிருந்து ஓய்வு பெற வேண்டியதாகிவிட்டது. அவர் விரைவில் குணமடைந்து சென்னை டெஸ்டில் இடம் பெறப் பிரார்த்திக்கிறோம்.**

---

ப: இரண்டுக்குமே திறமையும் பொறுமையும் வேண்டும். வேகப் பந்து வீச்சைச் சந்திக்க உபரியாகத் தேவைப்படுவது — துணிச்சல்.

கே: லார்ட்ஸில் நீங்கள் அடித்த மூன்று செஞ்சுரிகளைப் பற்றி...?

ப: லார்ட்ஸில் செஞ்சுரி அடிக்க வேண்டும் என்று ஒவ்வொரு பாட்ஸ்மன்னும் கனவு காண்பதுண்டு. முதல் செஞ்சுரியை அடித்த போது அக் கனவு நினைவாயிற்று. மூன்றாவது செஞ்சுரியை ஒரு சாதனை என்ற அளவில் வரவேற்றேன். மூன்று செஞ்சுரிகளுமே திருப்திகரமாக அமைந்தன.

கே: நீங்கள் எந்த சந்தர்ப்பத்தில் ஆடியதை மிகச் சிறப்பான ஆட்டம் என்று கருதுகிறீர்கள்? ஏன்?

ப: கடந்த ஆண்டு கோடையில், லீட்ஸில் ஆடியதைத்தான். விக்கெட்டும் சீதோஷ்ண நிலையும் இங்கிலாந்து பந்து வீச்சாளர்களுக்கு ஏற்றதாக இருந்தது; பந்து வேகமாக நகர்ந்த விதம் பாட்ஸ்மென்னுக்குச் சிறிதும் சாதகமாயில்லை. அந்தச் சவாலை ஏற்று ஆடியதைத்தான் நான் சிறந்த ஆட்டமாகக் கருதுகிறேன்.

கே: உங்கள் கிரிக்கெட் வாழ்க்கையில் யார் வழிகாட்டி உதவினார்கள்?

ப: நான் நிறைய பேருக்கு நன்றி சொல்ல வேண்டும். முறைப்படி ஒரு நிபுணரிடம் பயிற்சி பெற்று ஆட்டத்துக்குள் நுழையாவிட்டாலும் உலகின் தலைசிறந்த ஆட்டக்காரர்களுடன் விளையாடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது நான் பெற்ற அனுபவங்கள் விலைமதிப்பற்றவை. அந்த ஆட்டக்காரர்களைக் கூர்ந்து கவனித்து, அவர்களுடைய ஆட்டத்திலிருந்து பல உபயோகமான நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டேன். அவர்களிடம் பேசிய போதும் பல யோசனைகளைக் கூறி வழிகாட்டினார்கள்.

கே: மட்டையுடன் மைதானத்துக்குள் நுழையும் போது உங்களுக்கு டென்ஷன் ஏற்படுவதுண்டா?

ப: குறிப்பிட்டுச் சொல்லும்படியாக ஏற்

படுவதில்லை. ஆரம்பத்திலேயே சில விக்கெட்டுகள் விழுந்து விட்டால் ஓரளவு, 'டென்ஷன்' ஏற்படுவது சகஜம். இப்போது காவஸ்கர் ஓய்வு பெற்ற பிறகு என் பளு அதிகரித்துள்ளது.

கே: உங்கள் எதிர்காலக் குறிக்கோள் என்ன?

ப: இந்தியாவுக்கு இயன்றவரை அதிக ரன்கள் எடுக்க வேண்டும் என்பதுதான். நமது அணி டெஸ்டுகளிலும் ஒரு நாள் பந்தயங்களிலும் வெற்றி பெற வேண்டும் என்ற ஆசையும் இருக்கிறது. வேறு குறிக்கோள்கள் கிடையாது. என்னால் இயன்ற வரை சிறப்பாகச் செயல்படுவேன்.

கே: இசை, டிஸ்கோ போன்றவற்றில் உங்களுக்கு நாட்டம் இல்லையா?

ப: விசேஷமாக இல்லை. மனைவி, குழந்தைகளைப் பிரிந்து கிரிக்கெட் நிமித்தம் ஊர் ஊராகப் போக வேண்டியுள்ளதால், நேரம் கிடைக்கும் போது வீட்டோடு இருக்கவே விரும்புகிறேன்.

கே: ஆட்டக்காரர்கள் நாளிதழ்களுக்கு எழுதக் கூடாது என்று தடை விதிக்கும் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டின் ஆணையை எதிர்த்துக் கொண்டு நாளிதழ்களுக்கு எழுதுவதில் ஏன் விடாப்பிடியாக இருக்கிறீர்கள்?

ப: நான் எழுதுவது கிரிக்கெட் நிர்வாகக் குழுவை எதிர்த்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல. சண்டை சச்சரவுகளை நான் விரும்புகிறவனும் அல்ல. ஆனால் எதிரணியின் காப்டனும் பிற உறுப்பினர்களும் பல இதழ்களில் எழுதுவதால் இந்திய அணியும் சரி அம்பயர்களும் சரி, அபரிமிதமான மனக்கிலேசத்துக்கு உள்ளாகிறார்கள். இதைத்தான் நான் எதிர்க்கிறேன். தேவையின்றி அவர்களுக்கு இந்த மனச் சங்கடம் அளிக்கப்படும் போது நிலைமையை நேராக்க நானும் எழுதவேண்டியதாகிறது. பணத்துக்காகவும் நான் எழுதவில்லை.

கே: பணம் முக்கியமில்லை என்கிறீர்களா?

ப: நிச்சயமாக இல்லை. நல்ல கிரிக்கெட் விளையாடும்போது ஏற்படும் கலப்படமில்லாத, ஆத்மார்த்தமான சந்தோஷத்தில் ஒரு துளியைக் கூடப் பணத்தால் பெற முடியாது. அதே நேரத்தில் பணமே அவசியமில்லை என்றும் கூறிவிட முடியாது. வெறும் காற்றைச் சுவாசித்துக் கொண்டு உயிர் வாழ முடியுமா என்ன?

கே: கடைசியாக ஒரு கேள்வி. இந்த டெஸ்ட் தொடரில் இதுவரை வீழ்த்தப்பட்ட இந்திய அணி மீண்டும் எழுந்து நிமிர்ந்து நிற்குமா?

ப: அது சாத்தியமென்றே நினைக்கிறேன். நமது ஆட்டக்காரர்கள் தங்கள் ஆற்றல்களை உணர்ந்து தன்னம்பிக்கை பெற வேண்டும். நமது பிரதான பலம் பாட்டிங்தான். நமது பாட்ஸ்மன்கள் இனியும் காலந்தாழ்த்தாது தங்கள் சாகசத்திறனை வெளிப்படுத்த வேண்டும்.

மேலட்டை வண்ணப்படம்,

புகைப்படங்கள்:

பாலாஜி போட்டோகிராப்ஸ்

---



''பர்ஸை எடுன்னு பொம்பளை மாதிரி ஒரேயடியா வெட்கப்படறியே, ஏன்?''

''உள்ளே பத்துப் பைசா மட்டும் இருக்கிற பர்ஸை உன்னிடம் நீட்ட வெட்கமா இருக்காதா, என்ன?''

''இன்று காலை அமெரிக்கச் சுற்றுப்பயணம் மேற்கொள்கிறாராம்!''

''யாருடா?''

''நேற்று காலையில் அமைச்சராகப் பதவியேற்ற அருமைநாயகம்தான்!''

— உ. ராஜாஜி.



புதிதாக மாற்றலாகி வந்தவர்: ''இந்த ஆபீஸ்லே யாருமே சிரிக்க மாட்டாங்களா...?''
பழைய ஆசாமி: ''சிரிப்பாங்களே... உங்க கையில் அம்பது ரூபாயோ, நூறு ரூபாயோ இருப்பதாகத் தெரிஞ்சால்...!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்பிரியா.

அடுத்த இதழில்...




இந்த நாவலைப் படிப்பவர்கள்
ரூ. 1000 பரிசு பெற வாய்ப்பிருக்கிறது



- மேல்மருவத்தூருக்கு ஒரு விசிட் மற்றும் பங்காரு அடிகளார் பேட்டி.



- மேலதிகாரியைச் சமாளிப்பது எப்படி?
  — உங்கள் அலுவலகப் பிரச்னைகளுக்குச் சுலபமான தீர்வுகள்!

- உயிர் காக்கும் மருந்துகள் நஞ்சாகும் போது......
  — மருந்து தயாரிப்பு மற்றும் விற்பனையில் நடக்கும் ஊழல்களைப் பற்றிய ஸ்பெஷல் ரிப்போர்ட்

அதிக பக்கங்கள் :: அதே விலை!

## நீங்கள் கேட்டவை — தராசு

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

இரா. நல்லக்கண்ணு,
55, நடுத்தெரு,
கனக்காடு (அஞ்சல்),
— 627 501.



* அகாதமி பரிசு



* "அசைக்க முடியாது!"



* எல்லைப் பிரச்னை



* வாழ்க்கை சினிமா



* பட்டம் வேண்டாம்!

# கருணாநிதிக்கு மறுவாழ்வு கிட்டுமா?

* எஸ். வெங்கடேசன், கும்பகோணம்.

? கணிதமேதை ராமானுஜத்தின் வாழ்க்கை திரைப்படமாகவிருப்பது பற்றி...?

! இளைஞன் ராமானுஜத்தின் மேதைத் தன்மையைப் புரிந்து கொள்ளும் மனப்பக்குவம் அந்நாளைய நமது கல்வி முறைக்கும் கல்வியாளருக்கும் இருக்கவில்லை. இன்றும் கூட அந்த நிலைமையில் பிரமாத மாறுதல் எதுவும் இல்லை. இளைஞர்களின் ஆர்வங்களையும் கிரியா சக்திகளையும் ஊக்குவித்து அவர்கள் விரும்பும் பாதையை அமைத்துத் தரும் கல்வி முறை இங்கு வர வேண்டும். அது வருமோ வராதோ, அருண் வீரப்பனின் படமாவது வந்து இதை வலியுறுத்தினால் சரி. அவருடைய துணிச்சலுக்குப் பாராட்டு.

* பாலை அசோக், திருச்சி.

? சாகித்ய அகாதமி விருது பெற ஆதவனின் படைப்பு தேர்ந்தெடுக்கப்பட்டது பற்றி?

! அவர் மரணமடையாமல் இருந்திருந்தால் இவ்வளவு சீக்கிரம் அவரை இந்த விருது வந்தடைந்திருக்காது.

* பாபு, நாகப்பட்டினம்.

? ஒவ்வொரு கட்சியும் சினிமாக்காரர்களைச் சேர்த்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுவது ஏன்?

! கொள்கை அடிப்படையில் கவர முடியாதபோது செலுலாய்ட் கவர்ச்சியாவது உதவட்டுமே என்றுதான்.

* சீர்காழி பிரியன், சீர்காழி.

? பத்திரிகைகளில் அடிக்கடி பழைய (திருட்டு) ஜோக்குகள் இடம் பெறுகின்றனவே, தடுக்க முடியாதா?

! ஒவ்வொரு வாரமும் ஏராளமான பத்திரிகைகளில் நூற்றுக்கணக்கான ஜோக்குகள் வரும் போது எல்லாவற்றையும் படித்து, ஞாபகத்தில் வைத்திருந்து ஜோக்குகளைத் தேர்ந்தெடுப்பது என்பது மிகவும் கஷ்டமான பணி. 'காப்பி அடித்த ஜோக்கை ஏன் அனுப்பினாய்?' என்று கேட்டால் 'இல்லையே, ஆபீஸில் என் தோழன் (தோழி) சொன்னதைத் தானே எழுதி அனுப்பினேன்!' என்று

பதில் வருகிறது. திருட்டு என்று நிரூபிப்பது சாத்தியமில்லாமல் போகிறது. வாசக அன்பர்களின், ஜோக் எழுத்தாளர்களின் நன்நடத்தையை நம்பித்தான் செயல்பட வேண்டியிருக்கிறது. அவர்கள், சொந்தக் கற்பனை—வேறு பத்திரிகைக்கு அனுப்பவில்லை என்ற உறுதி மொழியை அளிப்பது நலம்.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? சைக்கிள் — மோட்டார் சைக்கிள் உடைப்பு, கார் உடைப்பு, கடை உடைப்பு, சிலை உடைப்பு ஆகியவற்றைச் செய்த புண்ணியவான்கள் கட்சியையும் உடைத்து விடுவார்களோ?

! பொதுச் சொத்துக்களை உடைத்தது சமூக விரோதிகள்; கட்சியை உடைப்பது சந்தர்ப்பவாதிகள் — சுயநலமிகள். இரண்டும் வெவ்வேறு வகையைதார்.

* மு. தினன், இளையான்குடி.

? எந்த ஒரு பல்கலைக் கழகத்திலிருந்தும் கௌரவப் பட்டங்களைப் பெறத் தாம் விரும்பவில்லை என்று ராஜீவ் தெரிவித்திருப்பது பற்றி...?

! ஒரு தார்மீகத் துணிவோடு ராஜீவ் அறிவித்திருப்பதை வரவேற்கிறோம். இதன் பின் விளைவாகவாவது முதுகு சொறியும் கௌரவப் பட்டங்களுக்கு ஒரு முடிவு ஏற்பட்டால் நல்லது.

* கே. ஜி. எஸ்ப். பழனிச்சாமி, பெங்களூர்.

? 'நமது தேசிய கீதத்தில் வரும் சிந்து இப்போது பாகிஸ்தானில் இருக்கிறது. அப்படியிருந்தும் அதை நாட்டு வணக்கப் பாடலில் சேர்த்துப் பாடுகிறோம்' என்று கருணாநிதி சுட்டிக் காட்டுகிறாரே?

! 'வடவேங்கடம் — தென்குமரி இடைப்பட்ட தமிழ் கூறும் நல்லுலகம்' என்ற வழக்கையும் பாரதியின் 'செந்தமிழ் நாடு' பாடலின் எல்லை வர்ணனைப் பகுதியையும் கூட நீக்கி விட வேண்டியதுதானா?

* சைதை வி. முரளி, சென்னை — 15.

? தமிழக அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள ஊதிய உயர்வு பற்றி?

! அது ஊதிய உயர்வே அல்ல; ஏறிவிட்ட விலைவாசிக்கு ஏற்ப வழங்கப்படும் இழப்பீடு தான். வரலாறு காணாத விதமாக பணவீக்கம் சென்னையில் 11.2 சதம் உயர்ந்து ரூபாயின் மதிப்பு 13.23 பைசாவாகக் குறைந்து போயிருக்கிறது!

* க. இளங்கோ, நத்தியநல்லூர்.

? 21.12.87 அன்று மதியம் இரண்டு மணி ஆங்கிலச் செய்தியில் பிரதமரின் வருகையை அறிவிக்கும்போது புதுக்கோட்டை என்பதனை 'படுகுட்டை' என்று செய்திவாசிப்பவர் உச்சரித்ததைக் கவனித்தீரா?

! அறிவிப்பாளரைக் குறை கூறுவானேன்? பிரதமரே 'புடு கொட்டே' என்று தானே உச்சரித்தார்? ஓரிடத்துக்குச் செல்பவர் அந்த இடத்தின் பெயரைச் சரியாக உச்சரிக்க முதலிலேயே கேட்டுத் தெரிந்து கொண்டிருக்க வேண்டாமா?

* எஸ். மஞ்சுளா, திருச்சி.

? எம். ஜி. ஆர். அவர்களின் இறுதி ஊர்வல ஜன வெள்ளம், அண்ணாதுரை அவர்களின் இறுதி ஊர்வல ஜனக் கூட்டத்தை விஞ்சி விட்டதால் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறுமா?

! டீ.வி. ஒளிபரப்பும் போலீஸ் கெடுபிடியும் அத்தகைய புதிய சாதனை நிகழாமல் கவனித்துக் கொண்டு விட்டன.

* ப்ரியபாரதி, போடிநாயக்கனூர்.

? 1988 எப்படி இருக்கும்?

! அரசியலைப் பொறுத்த மட்டில் 87ன் குழப்பங்கள் தொடரும். மற்றவைக்கு இஷ்டப்பட்ட பஞ்சாங்கத்தைப் பார்த்துக் கொள்ளவும்.

* ஆர். கப்பராவ், திருக்கோவலூர்.

? கருணாநிதிக்கு மறுவாழ்வு கிட்டுமா?

! கிடைக்கக் கூடியதையும் கெடுத்துக் கொள்ளாமல் இருந்தால் கிடைத்து விடும்.

* சி. மணி, புத்தனம்பட்டி.

? 'தி. மு. க. விலுள்ள எந்தக் கொம்பனும் அ. தி. மு. க. வை அசைக்க முடியாது' என்று நெடுஞ்செழியன் பேசியிருக்கிறாரே?

! அ.தி.மு.க. வில் உள்ள கொம்பர்களே அ. தி. மு. க. வை அசைத்துக் கொண்டிருக்கும் போது தி.மு.க. கொம்பர்கள் எதற்கு?

* இரா. நல்லக்கண்ணு, களக்காடு.*

? 88 எப்படி இருக்க வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுகிறீர்கள்?

! சிக்கன ஆண்டாக அறிவிக்கப்பட்டு அரசும் மக்களும் தேவையின்றி ஒரு பைசா கூடச் செலவழிக்கக் கூடாது என்று விரும்புகிறேன். ஒன்பதாவது நிதிக் கமிஷன் தலைவர் என். கே. பி. ஸால்வே இதைத்தான் கூறியுள்ளார். 'ஒரு பயங்கரமான பொருளாதார நெருக்கடியை நாடு எதிர்நோக்கியுள்ளது' என்று எச்சரித்த அவர், 'அரசு, உற்பத்திக்கு உதவாத இனங்களில் ஒரே ஒரு ரூபாய் செலவழித்தால் கூட, அது பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும் ஒரு சதித் திட்டமாகக் கருதப்பட வேண்டும்' என்று சொல்லியிருக்கிறார்.



தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம்,
தமிழ்நாட்டிலுள்ள 1500 பிரதம கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள்,
கைத்தறி மற்றும் துணிநூல் இயக்ககமும் செலுத்தும்

எங்கள் இதய அஞ்சலி

மறைந்த தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவர்

பொன்மனச் செம்மல் டாக்டர் **எம்.ஜி.ஆர்.** அவர்களுக்கு உளபூர்வமான

ஆழ்ந்த வருத்தத்தையும், வணக்கத்தையும் செலுத்துகின்றது.

மறைந்த தாங்கள் கைத்தறி நெசவு தொழிலாளருக்காக நெசவாளர் பாதுகாப்பு சட்டமும், குறைந்த பட்ச கூலி நிர்ணயமும் கொண்டு வந்து நிறைவேற்றினீர்கள். தாங்கள் அவ்வப்போது நெசவாளர்களுக்கு வாழ்வளிக்கும் பொருட்டு நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கும், பள்ளி பிள்ளைகளுக்கு சீருடைகளுக்கும், ஓய்வூதியம் பெறும் முதியோர்க்கும், கைத்தறி துணி தான் வழங்க வேண்டுமென்ற திட்டத்தை புகுத்தி ஏழை கைத்தறி நெசவாளர்களை வாழ வைத்து லட்சக்கணக்கான நெசவாளர்களையும், கைத்தறித் துறையைச் சார்ந்த எல்லோரையும் காத்து ரட்சித்த தங்களை இழந்து, தாயை இழந்த சேய்களைப்போல் தவிக்கும் நாங்கள் தங்கள் ஆத்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறோம்.



**கோ-ஆப்டெக்ஸ்**
**கைத்தறி**

தமிழ்நாடு கைத்தறித்துறை

# சந்தானத்தின் சபதம்!



"இதுவே கடைசி. இனி வரும் டிசம்பர் சங்கீத விழாக்களில் நான் பாடவே போவ தில்லை." என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார் மகாராஜபுரம் சந்தானம்.

'மூன்று கச்சேரிகள் மட்டும்' என்று கூறி வந்தவர், இப்போது "பாடவே மாட்டேன்" என்று சொல்ல என்ன காரணம்? யார் மீது கோபம்?

"அதெல்லாம் ஒன்றுமில்லை" என்றார்.

"இளைஞர்களுக்கு அதிக வாய்ப்புக் கிடைக்க வேண்டும் என்பதற்காக என் கச்சேரிகளைக் குறைத்துக் கொள்வதாகக் கூறினேன். அந்த நோக்கம் நன்றாகவே நிறைவேறியிருக்கிறது என்பதை அகாடமி நிகழ்ச்சி நிரலைப் பார்த்தாலே தெரியுமே!"

"பிறகு என்ன குறை?"

"குறை ஏதுமில்லை. மூன்று சபாக்களில் மட்டும் பாடினால் மற்ற ஏழு சபாக்காரர்கள் வருத்தப்படுகிறார்கள். எனக்கு எல்லாரும் வேண்டியவர்கள்தான்."

"அப்படியானால் எல்லாவற்றிலும் பாட வேண்டியதுதானே?"

"அப்படி ஏகமாய்ப் பாடினால் சங்கீதத்துக்கு நியாயம் செய்ய முடியாது என்பது என் அபிப்பிராயம்."

"கலெக்ஷன் ஆவதால்தானே உங்களைப் பாடச் சொல்லிக் கேட்கிறார்கள்? உதவினால் என்னவாம்?"

"முன்பு மாதிரி பிரபல வித்வான்களைப் போட்டால்தான் பணம் என்ற நிலை இன்று இல்லை. 'ஸ்பான்ஸர் ஷிப்!' வந்து விட்டதே!"

"சீசனில் பாடப் போவதில்லை என்றால் வேறு என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?"

"சென்னை நகர சபாக்களில் மாதம் ஒரு கச்சேரி செய்வேன். ஜனவரியில் முதல் கச்சேரியை மியூசிக் அகாடமி ஏற்பாடு செய்திருக்கிறது. எல்லாரும் கேட்கலாம். இலவசம்தான். டிசம்பரில் என் சொந்தப் பொறுப்பில் — செலவில் கச்சேரி செய்வேன். இதுவும் ரசிகர்களுக்கு இலவசமாகவே இருக்கும். சீசனின் மற்ற நாட்களில் இதர வித்வான்களின் கச்சேரிகளை ரசிப்பேன்; நிபுணர்களின் கூட்டங்களுக்குச் சென்று ஆய்வுச் சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயன் பெறுவேன்" என்று கூறும் சந்தானம், மகாராஜபுரம் டிரஸ்ட் மூலம் பள்ளி மாணவருக்கு இசை ஆர்வம் ஊட்டும் திட்டத்தையும் வைத்திருக்கிறார்.

— சாருகேசி

## பத்து நாள் மாட்ச்!

ஒரு நாள் கிரிக்கெட் பிரபலமாகிவிட்ட இக்காலத்தில் ஐந்து நாட்கள் டெஸ்ட் மாட்ச் போரடிக்கிறது என்னும்போது ஒரு டெஸ்ட் பந்தயம் பத்து நாட்கள் தொடர்ந்து நடந்தது என்றால்......?

பங்கேற்ற நாடுகள் இங்கிலாந்தும், தென் ஆப்பிரிக்காவும். அப்போது (1939) ஒரு டெஸ்ட் மாட்சுக்கு இத்தனை நாட்கள் என்று கால வரம்பு கிடையாது. மாட்ச் நடந்த நகரம் டர்பன்.

டாஸில் வெற்றிபெற்ற தென் ஆப்பிரிக்கா பேட் செய்யத் தொடங்கியது. 530 ரன்கள் எடுத்து, ஆல் அவுட் ஆன போது மூன்றாவது நாள். அடுத்து பேட் செய்யத் தொடங்கிய இங்கிலாந்து, ஐந்தாம் நாளில் வந்தபோது ஆல் அவுட் ஆனது. ரன் எண்ணிக்கை 316. ஃபாலோ ஆன் தராமல் தென் ஆப்பிரிக்கா மீண்டும் ஆட, ஸ்கோர் 480 ஆல் அவுட். 695 ரன்கள் எடுத்தால் தான் வெற்றிபெற முடியும் என்கிற நிலை இங்கிலாந்துக்கு.

ஏழாம் நாள் முடிவில் இங்கிலாந்து ஸ்கோர் 253க்கு ஒரு விக்கெட். மழையினால் எட்டாம் நாள் ஆட்டம் நடைபெறவே இல்லை.

எட்ஸ் ஒன்பதாம் நாள் செஞ்சுரி போட்டார். டெஸ்ட் சரித்திரத்தில் மிக அதிக நேரத்தில் போடப்பட்ட சதம் இதுதான்.

பத்தாம் நாளில் இங்கிலாந்தின் ஸ்கோர் 654க்கு ஐந்து என்று உயர்ந்தது. த்ரில்லான இந்தக் கட்டத்தில் எதிர்பாராத திருப்பம் ஏற்பட்டது. இங்கிலாந்து அணி, ஊர் திரும்ப, கப்பலுக்கு விரைய வேண்டிய நிலை. 41 ரன்கள் எடுத்தால் வெற்றி என்கிற நிலையில் இங்கிலாந்து அணி, கப்பலேறி விட்டது!

நன்றி: ஸ்டேட் பாங்க் ஹவுஸ் ஜர்னல்

தகவல்: எஸ். சந்திரமௌலி




(இ)காங்கிரஸ்
ஐயோ! என் கணவர் உட்கார்ந்த நாற்காலியில் யாரையும் உட்கார விட மாட்டேன்!
ஜானகி
முதல்வர் பதவி


ராஜீவை எதிர்க்க நாங்க போற வழி தான் சரியானது!
காங்(எஸ்)
லோகதளம்(அ)
வி.பி.சிங்
ஜனதா
பாரதீய ஜனதா
லோக் தளம்(ப)


பணயத்துக்கு விடுவிக்கப்பட்ட நக்ஸலைட்டுகள்
நக்ஸலைட்டுகள் விடுவித்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகள்
எல்லாம் நான் பாத்துக்குவேன்! சொக்குத் தோழியும்!




# கல்கி

1988 ஜனவரி 10
மலர் 46 இதழ் 24
பிரபவ மார்கழி 26




# குடுமிப் பிடிச் சண்டை!

இந்த இதழ் வாசகர்களின் கரங்களை வந்தடைவதற்கு முன் தமிழ் நாட்டின் அடுத்த முதல்வர் யார் என்பது ஒருவேளை தீர்மானமாகி விடலாம். ஆனாலும் அதற்கு முன்பாக நடந்து கொண்டிருக்கிற அசிங்கங்களின் நாற்றம் அடங்க இன்னும் பல காலம் ஆகும். "உட்கட்சி விவகாரம்; நமக்கென்ன வந்தது?" என்று நாம் மூக்கைப் பிடித்துக் கொண்டு ஒதுங்க முடியாது. காரணம், நாளை நம்மை ஆளப் போகிறவர்கள் இவர்களே. ஒரு சோதனையான காலகட்டத்தில் எப்படி இவர்கள் நடந்து கொள்கிறார்கள் என்பதை ஆராய்வது நமது கடமை.

முதல்வரின் உயிர் பிரிந்து அவரது உடல் பூமிக்கடியில் மறையும் முன்னரே இவர்கள் தங்கள் கோஷ்டிப் பூசலை ஆரம்பித்து விட்டார்கள். ஜெயலலிதாவை இறுதி ஊர்வல வாகனத்திலிருந்து இழுத்துத் தள்ளியதும் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக அழைத்துப் போய் வாகனத்தில் ஏற்றி வீட்டுக்கு அனுப்பியதும் அ.தி.மு.க. கட்சிக்கும் அதனை நிறுவிய தலைவருக்கும் பெரிய அவமானத்தைத் தேடித் தந்துள்ளன. அதுதான் போகட்டும் என்றால் துக்க தினங்கள் முடிவடைவதற்கு முன்பாகவே அடுத்த முதல்வர் யார் என்பதில் ஏற்பட்டிருக்கிற போட்டா போட்டியும் ஒருவரை ஒருவர் கவிழ்க்க நடக்கிற சதித் திட்டங்களையும் காணச் 'சீ' என்று போய் விட்டது நமக்கு.

பார்க்கப் போனால், ஜனநாயகத்தில் ஒரு முதல்வர் காலமானால் அடுத்தவர் பதவிக்கு வருவது என்பது மிகவும் இயல்பாகவும் சுலபமாகவும் நடக்க வேண்டிய ஒரு காரியம். ஆனால் நமது நாட்டில் மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி நல்ல ஜனநாயக மரபுகள் கடைப்பிடிக்கப்படுவதில்லை. உட்கட்சி ஜனநாயகம் என்பது அடியோடு இல்லாததால் புதிய நல்ல தலைவர்கள் உருவாவதில்லை என்பதோடு, இது போன்ற ஒரு சோதனையான காலகட்டத்தில் அவனவனும் தன்னைத் தானே தலைவனாக நினைத்துக் கொள்கிற தான் தோன்றித்தனம்தான் தலையெடுக்கிறது. துணைப் பிரதம மந்திரியாக இருந்த பட்டேல் காலமான பிறகு அந்தப் பதவிக்கு வேட்டு வைத்தவர் நேரு. அந்த முன் மாதிரியை மாநில முதல்வர்களும் பின்பற்றப் போக, பிரதமரின் அல்லது முதல்வரின் இடத்தைத் தாற்காலிகமாகக் கூட இட்டு நிரப்புவது என்பது பெரும் பிரச்னையாகி விட்டது. அமைச்சரவையில் இரண்டாவது தகுதி மூன்றாம் தகுதி என்ற 'ராங்க்' முறை கூட அனைவரும் அறியத் தெளிவாக்கப்படுவதில்லை. இதனால் குழப்பங்கள் ஏற்படுகின்றன.

எப்படியோ எம்.ஜி.ஆர். மறைந்த கையோடு ஒரு நெருக்கடியைச் சமாளித்து, தாற்காலிக முதல்வர் என்ற அளவில் நெடுஞ்செழியனைப் பதவியில் அமர்த்தி விட்டார் ஆளுனர். அதன் பின்னர் பதவிப் போட்டிகளும் பொருமைக் கொந்தளிப்புகளும் வெடித்தெழ அதிக காலமாகவில்லை. இது வரை கட்சி நடவடிக்கைகளிலோ ஆட்சி அதிகாரத்திலோ சம்பந்தப்படாமல், ஒரு எம்.எல்.ஏ. ஆகக் கூட இல்லாமல் இருக்கிற வி. என். ஜானகியை அடுத்த முதல்வராக்கப் பார்க்கும் வீரப்பன், "கட்சி உடையாமல் இருப்பதற்காகத்தான் எம்.ஜி.ஆரின் மனைவியை முதல்வராக்க முயல்கிறேன்" என்று காரணம் கற்பிப்பது சிரிப்புக்கு இடமளிப்பது மட்டுமல்ல; அவருடைய உள்நோக்கமும் தெளிவாகவே புரிகிறது. 'ஜானகி ஒரு மோசமான முதல்வராகத் திகழ்வார்' என்று நாம் இப்போதே தீர்ப்பு வழங்கக் கூடாதுதான் என்றாலும், 'அவர் பதவிக்கு வரவேண்டிய முறை இதுவல்ல' என்று அழுத்தம், திருத்தமாகக் கூறலாம். இதற்கு மறுபுறமாக, 'இப்போதுள்ள மந்திரிசபை இப்படியே அடுத்த தேர்தல் வரை தொடர்வதுதான் நியாயம்; அதைத்தான் எம்.ஜி.ஆர். விரும்புவார்' என்ற நெடுஞ்செழியனின் கூற்றும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. இதற்கிடையில் கே.ஏ.கே., 'எனக்கு மட்டும் அமைச்சராக உரிமை இல்லையா?' என்று ஏங்க, ஜெயலலிதா கோஷ்டி, 'ஐயோ கட்சியை உடைக்கிறார்களே!' என்று புலம்ப, எம்.எல்.ஏ.க்கள் விலை பேசப்படுவதாகவும் கடத்தப்படுவதாகவும் செய்திகள் வெளிவர, நிலைமை படுகேவலமாகி விட்டது.

கட்சி எம். எல். ஏக்கள் முறையாகக் கூடி, நிர்ப்பந்தங்கள் ஏதுமற்ற அமைதிச் சூழலில் சுதந்திரமாக இயங்கி, தங்கள் அடுத்த தலைவரை — தமிழக முதல்வரை — ஒழுங்கான விதத்தில் தேர்ந்தெடுக்க முடியவில்லை என்றால் —

அமைச்சரவையைக் கலைத்துவிட்டு மக்களைச் சந்திக்கச் செல்லட்டுமே பார்க்கப் போனால் இவர்களில் யாருக்குத்தான் மக்கள் வோட்டுப் போட்டார்கள்? எல்லாமே எம்.ஜி.ஆருக்கு விழுந்த வோட்டுக்கள்தானே!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



* பிறந்த பதினெட்டாவது மணி நேரத்திலேயே இதயத் துடிப்பைச் சீராக நிர்வகிக்கும் கருவியை இக்குழந்தையின் உடலில் பொருத்திப் புத்துயிர் அளிக்கப்பட்டது.

# வருடத்துக்கு 1,000 ஆபரேஷன்கள்!

இதய நோய்க்கு அறுவைச் சிகிச்சை என்பது இன்று விஞ்ஞான ரீதியாக எத்தனையோ வளர்ச்சி அடைந்து விட்ட நிலையில், தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பே இதய அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டுள்ளது என்று சொன்னால் ஆச்சர்யமாகவே இருக்கும். 1896 — ஆம் ஆண்டில் முதன் முதலாக டாக்டர் ரேன் என்ற ஜெர்மானியர்தான் காயம்பட்ட இதயத்துக்குத் தையல் போட்டு இந்தத் திருப்பணியை ஆரம்பித்து வைத்தார். அப்புறம் ஓர் அரை நூற்றுண்டுக்கும் அதிகமாக இதயம் துடித்துக் கொண்டிருக்கும் போதேதான் அதற்கு அறுவைச் சிகிச்சையும் நடந்து வந்தது. இதயம் துடித்துக் கொண்டிருக்கும் போதே அதில் துளைகளை அடைப்பது, தையல் போடுவது என்பதெல்லாம் மிகவும் சிரமமான காரியங்களாக இருந்தன. இதய அசைவுகளினூடே துல்லியமாக இன்ன இடம் என்று கவனித்துச் செயல்பட முடியாததால் காலதாமதமாயிற்று என்பதோடு நோயாளிக்கு ஆபத்துக்களும் அதிகமாகவே இருந்தன.

1953 — இல்தான் இந்தப் பிரச்னைக்கு விடை கிடைத்தது. அந்த ஆண்டு மே மாதம் ஆறும் தேதி கிப்பன்ஸ் என்ற அமெரிக்க ஸர்ஜன் செய்த ஓர் அறுவைச் சிகிச்சை வரலாற்றுச் சிறப்பு மிக்கது. காரணம், அந்த ஆபரேஷனின் போது முதன் முதலாக Heart Lung Machine பயன்படுத்தப்பட்டது. இதயத்தின் துடிப்பை நிறுத்திவிட்டு இந்தக் கருவியைப் பயன்படுத்தி இரத்த ஓட்டத்தை உடலின் இதர உறுப்புக்களுக்கு ஒழுங்கு செய்து கொண்டு செயலற்றுக் கிடக்கும் இதயத்தில் ஏற்பட்டிருந்த ஒரு துளையை அடைத்தார் அந்த டாக்டர்.

## ஆச்சர்ய ஆபரேஷன்

இதைவிட சுவாரஸ்யமான செய்தி ஒன்று உண்டு. அதாவது, இந்தப் புதிய கருவி ஆரம்ப காலத்தில் அவ்வளவு திருப்திகரமாக அமையவில்லை. போகப் போகத்தான் பல மாற்றங்களை ஏற்றுக் கச்சிதமடைந்தது. எனவே, அந்தத் தொடக்க காலத்தில் டாக்டர் வில்லி ஹை என்ற அமெரிக்க ஸர்ஜன் வேறு ஒரு முறையைக் கையாண்டார். சிறு குழந்தை ஒன்றுக்கு இதயத்தில் ஆயுத சிகிச்சை தேவைப்பட்ட போது, அவர் ஹார்ட் — லங் மிஷினுக்குப் பதில் மனிதனையே பயன்படுத்தினுர்! அதாவது குழந்தையின் உடலினுள் ரத்த ஓட்டம், தாய் அல்லது தந்தையின் ரத்த ஓட்டத்துடன் இணையுமாறு தொடர்பு ஏற்படுத்தப்பட, குழந்தையின் இதயத் துடிப்பு சிகிச்சைக்காகச் சில காலம் நிறுத்தி வைக்கப்பட்டது. பெற்றோனின் இதயமே குழந்தையின் உடலுக்குரிய ரத்த ஓட்டத்தையும் கவனித்துக் கொண்டு இரட்டைப் பணியாற்றியது! குழந்தையின் இதயத்தில் ஆயுதச் சிகிச்சை நடந்து முடிந்ததும் அது மீண்டும் இயங்குமாறு செய்யப்பட்டது. பெற்றோனின் உடலுடன் இருந்த ரத்த ஓட்ட இணைப்பு நீக்கப்பட்டது. இந்த முறைக்கு ஹியூமன் கிராஸ் ஸர்குலேஷன் என்று பெயர். இந்த முறையில் டாக்டர் வில்லி ஹை முப்பதுக்கும் மேற்பட்ட நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்தார்!

## இயற்கை Vs செயற்கை

ஹார்ட் — லங் மிஷின் எவ்வளவோ வளர்ச்சி அடைந்துவிட்ட போதிலும் இன்றைய விஞ்ஞான யுகத்திலும் கூட அதில் இன்னமும் ஒரு குறை உண்டு. இதன் வழியே திரும்பத் திரும்பப் பாய்ந்து சுத்தமடைந்து

* செயற்கை இதயம்.



மீண்டும் உடலுக்குள் புகும் ரத்தத்தின் அணுக்கள் சில மணி நேரங்களில் சேதமடையத் தொடங்குகின்றன. எனவே ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் இதய அறுவைச் சிகிச்சையைச் செய்து முடித்தாக வேண்டும். ஆனால் அதே ரத்தம்தான் இதயத் துள்ளும் நுரையீரலின் உள்ளேயும் மாறி மாறிப் புகுந்து வெளிப்படுகிறது. சில மணி நேரங்கள் அல்ல, சில நாட்கள் அல்ல, மாதங் கள் அல்ல, மனிதனின் ஆயுட்காலம் முழுவ தும் — எழுபது எண்பது ஆண்டுகள் வரை யில் — இந்த இயக்கம் தொடர்கிறது. ஆனாலும் இரத்தத்தின் தன்மை மாறுவதேயில்லை! செல்கள் சேதமடைவதில்லை. இந்த இயற் கையின் அற்புதத்தை வியக்கும் வேளையில் தான் செயற்கை முறைகளில் உள்ள குறை பாடுகளையும் நாம் உணர முடிகிறது.

## நான்கு அறைகள்

இதயத்தின் பணி இரண்டு. ஒன்று, உடலில் உள்ள உறுப்புக்கள் அனைத்துக்கும் நல்ல ரத்தத்தைப் பாய்ச்சுவது. மற்றொன்று, உடலில் உள்ள உறுப்புக்களில் பாய்ந்து திரும்பி வரும் அசுத்த ரத்தத்தை உள்வாங்கிக் கொண்டு, அதனைச் சுத்தப்படுத்துவதற்காக நுரையீரலுக்குச் செலுத்துவது. நுரையீரலுக்குச் செல்லும் அசுத்த ரத்தம் சுவாசத்தின் போது கிடைக்கும் பிராண வாயுவினால் சுத்திகரிக் கப்பட்டு மீண்டும் இதயத்துக்குத் திரும்ப, அதனை இதயம் பெற்றுக் கொண்டு மீண்டும் உடலில் உள்ள பல்வேறு உறுப்புக்களுக்கு விசையோடு பாய்ச்சுகிறது.

இதயத்தில் மொத்தம் நான்கு அறைகள் உண்டு. மேலே உள்ள அறைகளை ஆரிகிள் என்றும் கீழே உள்ள இரு அறைகளை வெண்ட்ரிகிள் என்றும் சொல்கிறோம். மேலே அல்லது கீழேயுள்ள இரு அறைக ளுக்கு இடையில் உள்ள தடுப்புச் சுவரில் சில சமயம் சிறிய துளை விழுந்து விடும். இதனை அறுவைச் சிகிச்சை மூலம் அடைத்து விட முடியும். அதன் பின் நோயாளிக்குப் பூரண குணம் கிடைத்துவிடும். இந்த ஊனங் களை முறையே ஆட்ரியல் ஸெப்டல் டிஃபெக்ட் என்றும் வெண்ட்ரிகுலர் ஸெப் டல் டிஃபெக்ட் என்றும் கூறுவர்.

* செயற்கை இதயம் பொருத்தப்பட்ட முதியவர்.



அடிக்கடி ஜலதோஷம், இருமல் ஏற்படு வது; உடல் வளர்ச்சி சீராக இல்லாதிருப்பது போதிய எடை இன்மை இவையெல்லாம் இந்த நோய்க்கான அறிகுறிகள். இந்த அறிகுறிகள் உடையவர்கள் டாக்டரை அணுகி ஆலோசனை பெறுவது நலம்.

## புளூ பேபி

'புளூ பேபி' என்று சொல்லிக் கேள்விப் படுகிறோம். குழந்தைகளுக்கு (பிறவியிலேயே கூட) இடைச் சுவரில் துளை மிகவும் பெரி தாக உள்ள நிலையில் சுத்த ரத்தமும் அசுத்த ரத்தமும் ஒன்றுடன் ஒன்று கலந்து போய் விடுவதால் ஏற்படுகிற பிரச்னை இது. உடல் முழுவதும் இலேசாக நீலம் பாரித்தது போல் தென்படும்.

சில சமயம் நுரையீரலுக்குப் போகும் அசுத்த ரத்தக் குழாயில் அடைப்பு ஏற்பட்டு அங்கு ரத்தம் தடைப்பட, பிரச்னை தோன் றுவதுண்டு. இதற்குச் சிக்கலான அறுவைச் சிகிச்சை செய்தாக வேண்டும்.

எல்லா வகையான புளூ பேபி நோய்களை யும் ஆயுத சிகிச்சையால் குணப்படுத்த முடியாது. சில வகை நோயாளிகளுக்கு ஸர் ஜரியே கூடாது. வேறு சிலருக்கு அறுவைச் சிகிச்சை செய்வதில் ரிஸ்க் அதிகம்.

## ஒரு வழிப் பாதை

இதயத்ினுள் ரத்த ஓட்டத்தை ஒரு வழிப் பாதையில் செலுத்துவது வால்வு களே. இவை ஒரே திசையில் இரத்த ஓட் டத்தை அனுமதிக்கும். இவை பழுதுபட் டால் இரத்தம் எதிர்த் திசையில் பாய வாய்ப்பு ஏற்படுகிறது. அல்லது வால்வு அடைத்துக் கொண்டு ரத்த ஓட்டத்தைத் தடைப்படுத்துவதும் உண்டு. இவற்றுக்கும் ஆயுத சிகிச்சை செய்கிறார்கள். வால்வுக ளைப் பழுது பார்க்கிறார்கள். ஆனால் மிக மோசமாகப் பாதிக்கப்பட்ட வால்வுகளை நீக்கி விட்டுச் செயற்கை வால்வுகளைப் பொருத்துவதும் உண்டு. செயற்கை வால் வுகள் சிறு பந்து போன்ற அமைப்பிலும் வட்டத் தகடு போன்ற அமைப்பிலும் உள் ளன. இறந்து போன மனித உடல், பன்றி

- 'கொலஸ்ட்ரால்' எனப்படும் கொழுப்புச் சத்து ரத்த நாளத்தில் அடைப்பை உண்டாக்குவதால் ஏற்படும் இதய நோய் பெண்களுக்கு வருவது மிகவும் குறைவு. நன்மை தரக் கூடியது, கெடுதல் உண்டாக்கக் கூடியது என்று இரண்டு வகை 'கொலஸ்ட்ரால்'கள் உள்ளன. இவற்றுள் தீமை தரும் 'கொலஸ்ட்ரால்' பெண்களின் பருவ காலம் முதல் 'மெனோபாஸ்' நிலை வரை ஏற்படுகிற உடலியல் மாற்றங்களால் வெளியேற்றப்படுவதே இவர்களை இதய நோய் அதிகம் தாக்காததற்குக் காரணம்.

- 'பொதுவாக இதய நோய்த் தாக்குதலுக்கு அதிகம் பேர் ஆளாகும் நேரம் காலை எட்டு மணி முதல் பன்னிரண்டு மணி வரைதான். 'டென்ஷன்' — பரபரப்பு காலை நேரத்தில்தான் அதிகம் என்பதே காரணம்.

- இருபது ஆண்டுகளுக்கு முன்னால் இதய நோயால் பாதிக்கப்பட்ட இந்தியர்கள் நாற்பது—ஐம்பது வயதினராகவே இருந்தனர். இப்போது இருபத்தைந்து—முப்பது வயதுக்காரர்கள் கூட இந்த நோய்க்கு ஆளாகிறார்கள்! காரணம், பொறுப்பான உயர் பதவிகளில் இன்று இளைஞர்கள் அமர்வதுதான்; டென்ஷனுக்கு ஆளாவதுதான்.

அல்லது கன்றுக் குட்டியின் வால்வுகளை எடுத்துப் பொருத்துவதும் சாத்தியமே. செயற்கை வால்வுகளில் ஒரு சிக்கல் என்னவெனில் இவற்றில் ரத்தம் படும்போது நாளாவட்டத்தில் ரத்தம் உறைந்து போகிறது. அதனால் வால்வுகள் செயலிழக்கின்றன. இரத்தம் உறையாமல் இருக்கத் தரப்படும் மருந்துகளினால் சிலருக்குப் புதிய சிக்கல்கள் தோன்றக் கூடும். வேறு உயிரினத்திலிருந்து எடுத்துப் பொருத்தப்படும் வால்வு சில காலத்தில் கிழிந்து விடும் அபாயமுள்ளது. மிகவும் தரமான செயற்கை இதய வால்வுகள் இன்னும் வடிவமைக்கப்படவில்லை என்றே சொல்ல வேண்டும்.

## பைபாஸ் ஸர்ஜரி

இருதயம், மற்ற உடலுறுப்புகளுக்கு இரத்தம் பாய்ச்சுவது ஒருபுறமிருக்க, இதயத்தின் இயக்கத்துக்கே கூட ரத்தம் தேவையல்லவா? இரண்டு ரத்த நாளங்கள் வழியே இதயத்துக்கு ரத்தம் பாய்கிறது. இவற்றைக் கரோனரி ஆர்ட்டரி என்பர். இந்தப் பிரதான ரத்தக் குழாய்களில் கொழுப்புச் சத்து சேர்வதால் அடைப்பு ஏற்படும் போது இருதயத்துக்கு ரத்த ஓட்டம் குறைய, தோள் பகுதியில் தாங்க முடியாத வலி ஏற்படும்; வியர்த்துக் கொட்டும்; வயிற்றைப் புரட்டிக் கலக்கும். இதனை 'ஹார்ட் அட்டாக்' என்று உடனே புரிந்து கொண்டு மருத்துவ உதவி நாட வேண்டும்.

சில நோயாளிகளுக்குப் பலூன் சிகிச்சை முறையில் அடைப்பை நீக்கி ரத்த ஓட்டத்தைச் சீர்படுத்த முடியும். (3.1.88 கல்கி — பக்கம் 11) வேறு சிலருக்கு பைபாஸ் சர்ஜரி தேவைப்படுகிறது. பைபாஸ் என்பது மாற்று வழிப்பாதை ஏற்படுத்துவதுதான். காலில் உள்ள ரத்த நாளம் ஒன்றினை எடுத்து இருதயப் பகுதியில் பொருத்தி இந்த மாற்று வழியை ரத்த ஓட்டத்துக்கு ஏற்படுத்தி விடுகிறார்கள்.

## பத்தாயிரம் ஆபரேஷன்கள்

இருதய அறுவைச் சிகிச்சை ஒரு காலத்தில் மிகவும் ஆபத்தான ஒன்றாகக் கருதப்பட்டது. இப்போது ஓபன் ஹார்ட் சர்ஜரி சர்வசாதாரணமாகி விட்டது. இந்தியாவில் நாற்பது இடங்களில் ஆண்டுதோறும் பத்தாயிரம் பேருக்குக் குறையாமல் இருதய அறுவைச் சிகிச்சை செய்யப்படுகிறது.

அபரிமிதமான டென்ஷனினாலும் ஹார்ட் அட்டாக் ஏற்படுகிறது. அதிர்ச்சி தரும் செய்தி, அல்லது வேலைச் சுமை — கவலை காரணமாக அதீத உணர்ச்சிவசப்படும்போது CATECHOLAMINES என்னும் ஹார்மோன் உடம்பில் சுரக்கிறது. இந்த ஹார்மோன் இரத்த நாளங்களைச் சுருங்கச் செய்யும் சக்தி கொண்டது. தவிர, மூளையிலுள்ள சில நரம்பு மையங்களும் ரத்த நாளங்களைச் சுருங்கச் செய்கின்றன. இதன் விளைவாக இருதயத்துக்குப் போய்ச் சேர வேண்டிய குருதியின் அளவு குறைய, இதயம் ஊட்டமிழந்து உடனே பாதிப்புக்குள்ளாகிறது. நெஞ்சுவலி, மாரடைப்பு எனப்படுவது இதுதான்.

## இதய ஆரோக்கியம்

இருதயத்தை ஆரோக்கியமாக வைத்திருக்கச் சில அடிப்படை நியதிகளைக் கடைப்பிடித்தால் போதும்:

* டென்ஷன் குறைந்து மன அமைதி பெற யோகம், தியானம், பக்தி மார்க்கச் சிந்தனைகள் உதவும்.

* வயிறு முட்டச் சாப்பிடாமல் முக்கால் வயிறு நிரம்பியதும் நிறுத்திவிட வேண்டும். எடை கூடாமல் கவனித்துக் கொள்ள வேண்டும்.

* தினம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். இதையும் அளவுக்கு மீறிச் செய்யக் கூடாது. அரைமணி முதல் ஒரு மணி நேரம் வரை நடப்பது மிகச் சிறந்த பயிற்சி.

* மது, சிகரெட் போன்ற தீய பழக்கங்களை விட்டொழிக்க வேண்டும். இதற்கு உடல் பலத்தை விட மனோபலம்தான் முக்கியம் என்பதைப் புரிந்து கொண்டு அதை வளர்க்க வேண்டும்.

மாமேதையான ஒரு சர்ஜன் சொன்னார்: "நான் உடம்பைக் கிழிப் பார்க்கிறேன்; கடவுள்தான் குணப்படுத்துகிறார்" என்று. இதை மறவாமல் இருப்பது, நோயைக் குணப்படுத்த மட்டுமல்ல; உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளவும் உதவும்.

**டாக்டர் ஸாலமன் விக்டர்**

கூறக்கேட்டுத் தொகுத்து எழுதியவர்:
**சுப்ர பாலன்**

# 'முகம்தான் சிவப்பு; மனமோ கறுப்பு!'



சசிகலா தம்பதி.



**— வரதட்சணைக் கொடுமைக்குப் பலியான சசிகலாவின் சோகக் கதையை நமது நிருபர் நேரில் சென்று, பார்த்து, கேட்டறிந்த விவரங்களின் அடிப்படையில் எழுதுகிறார்......**

''குட்டி!'' — அப்படித்தான் சசிகலாவை அவள் குடும்பத்தார் அழைத்தார்கள். ஹிந்தியில் 'குட்டி' (Guddi) என்றால் 'பொம்மை' என்று பொருள். பொம்மை போல அழகான சசிகலா வளர வளர அவள் அழகும் வளர்ந்தது. 'குட்டி'யின் தந்தை மிருத்யுஞ்சய ராவ் கர்நாடகத்தைச் சேர்ந்தவர்தான் என்றாலும் மத்தியப் பிரதேசத்தில் வெகு காலம் தங்கிப் பணியாற்றியதால், அவர் குடும்பத்தார் அனைவருமே ஹிந்தியில் சரளமாகப் பேசவும் அம்மொழியைப் படிக்கவும் பழகியிருந்தார்கள். குட்டி ஹிந்தியில் எம்.ஏ. பட்டமே பெற்றிருந்தாள். தவிர, சித்திரம் வரைதல் போன்ற நுண்கலைகளிலும் அவள் பிரகாசித்தாள். அவ்வப்போது ஹிந்தியில் கவிதைகள் எழுதியதும் உண்டு.

அழகும் ஆற்றலும் படைத்த, ஒரு சுறுசுறுப்பான தேனீ போன்றதமது கடைசி மகளுக்கு மாப்பிள்ளையைத் தேடித் தேடிப் பிடித்தார் மிருத்யுஞ்சய ராவ். திப்டூரைச் சேர்ந்த மாப்பிள்ளை ராமசுவாமி, எம். பி. பி. எஸ். தேறிய மருத்துவர். இருபதாயிரம் ரொக்கமும், திருமணத்துக்கு முதல் நாள் சம்பந்தி மிகவும் வற்புறுத்தியதன் பேரில் மேலும் ஐயாயிரம் ரூபாயும், நாற்பது தோலா தங்க நகைகளும், கலர் டீ. வி., ஃப்ரிட்ஜ் போன்ற சமூக அந்தஸ்து அடையாளங்களும் திருமணத்தையொட்டி வரதட்சணையாக வழங்கப்பட்டன.

மணவாழ்க்கையின் முதல் ஐந்தாறு மாதங்கள் சசிகலாவின் வாழ்வில் வசந்தம் வீசாவிட்டாலும், தொல்லை எதுவும் இருந்ததாக வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆனால் பிரச்னைகள் சீக்கிரமே முளைக்க ஆரம்பித்தன...

சசிகலா கொண்டு வந்த வரதட்சணை போதாது என்று கணவர் ராமசுவாமியும் மாமனார், மாமியாரும் குத்திக் காண்பிக்க ஆரம்பித்தனர். ''திப்டூரில் ஒரு நர்ஸிங் ஹோம் கட்டுவதற்கு உன் தந்தையிடமிருந்து குறைந்தபட்சம் ஐம்பதாயிரம் ரூபாய்



* மரணத்தை அணைத்த சசிகலா.



* சசிகலாவின் தாயுடன் குழந்தை அனு.

வாங்கி வா'' என்று பிடுங்கி எடுக்கத் தொடங்கினர்.

கணவரோடு ஒரு முறை, வாரணாசியில் வசித்த தனது அக்காவைக் காணச் சென்றாள் சசிகலா. அங்கு சில நாட்கள் தங்கித் திரும்பினால் டாக்டரின் மனம் வரதட்சணையிலிருந்து திசை திரும்பலாம் என அவள் எண்ணியிருக்கலாம். ஆனால் நடந்தது அதற்கு நேர் மாறான செயல். ரயிலில் ஊருக்குத் திரும்புகையிலேயே சசிகலாவைத் துளைத்தெடுக்க ஆரம்பித்தார் ராமசுவாமி. "உன் அக்கா வீட்டைப் போல் எனக்கும் ஒரு பெரிய வசதியான வீடு கட்டித் தரும்படி உன் அப்பாவிடம் சொல். இல்லாவிட்டால் பெங்களூரில் உள்ள உங்கள் சொந்த வீட்டை என் பெயருக்கு எழுதித் தரச் சொல்'' என்று அவர் கூசாமல் நச்சரித்த போது குறுகிப் போனாள் சசிகலா.

சசிகலாவின் ஏமாற்றங்களுக்கும் துயரங்களுக்கும் வடிகாலாக அமைந்தது அவளுடைய டைரிதான். வீட்டாருக்குத் தெரியாத ஹிந்தி மொழியில் அவள் அதில் எழுதினாள்:

''சிறுவயதிலிருந்து இருபது வருடங்களாக நான் அழாத அழுகையை எல்லாம் இந்தச் சில வருடங்களில் அழுது தீர்த்து விட்டேன். என் கணவன் என்னைப் பூஜிக்கவில்லை; என் பணத்தைத்தான் பூஜிக்கிறார். அவர் மோகம் என்னிடம் அல்ல; என் நகைகளிடம்தான்!''

இதற்கிடையே சசிகலாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. எப்பொழுதும் கலகலப்பாக இருக்கும் 'குட்டி' திருமணத்துக்குப் பிறகு வாட்டமுற்றுக் காணப்பட்டதைக் கவனித்த அவள் அக்காவும் மற்ற பிறந்தகத்தாரும் குழந்தை அனுவின் வருகை அவளுக்குப் பழைய உற்சாகத்தை மீண்டும் அளிக்கும் என நம்பினர்.

ஆனால் சசிகலாவின் டைரி சோகச் சுமையால் மேலும் கனத்துத்தான் போயிற்று...

''எதைச் சொல்வது... எதை விடுவது...? மனம் வெறுத்துப் போய் விட்டது. இந்த வீட்டில் எதைச் செய்யவும் பயமாக இருக்கிறது... இரண்டு பெரிய தவறுகளைச் செய்து விட்டேன். ஒன்று: இவரைக் கல்யாணம் செய்து கொண்டது; இரண்டு: ஒரு குழந்தையைப் பெற்றது!''

ஒவ்வொரு பெண்ணும் பரவசத்துடனும் பூரிப்புடனும் வரவேற்கும் தனது முதல் குழந்தையைக் குறித்து ஒரு பெண் இவ்வாறு எழுதினாளெனில் அவள் எவ்வளவு மனம் நொந்து போயிருக்க வேண்டும்! பெற்றோர் மனமுடைந்து போய் விடுவார்கள் என்பதால் சசிகலா தன் துன்பங்களை அவர்களிடம் நேரிடையாகச் சொல்லாவிட்டாலும் அவை இலை மறை காயாக அவர்களுக்குத் தெரியத் தொடங்கின. அவ்வப்போது திப்டூருக்கு மகளைப் பார்ப்பதற்காக வந்தார் சசிகலாவின் அப்பா. சரியாக முகம் கொடுத்துப் பேசாத சம்பந்திகளிடமும் மாப்பிள்ளையிடமும் கோபித்துக் கொள்ளாமல் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டார். துன்பங்களைப் பொருட்படுத்தாமல் வாழ மகளுக்கு உபதேசம் செய்தார். ஆனால், "தமது அருமை 'குட்டி'யின் வாழ்க்கை வீணாகி விட்ட வருத்தத்தில் சீக்கிரமே அவர் இறந்து போனார்'' என்றார் சசிகலாவின் அக்கா.

தந்தை இறந்த போது, இறுதிச் சடங்குகளுக்குக் கூடச் சசிகலாவை அவள் புக்ககத்தார் அனுப்பி வைக்கவில்லை. சில நாட்கள் கழித்துத்தான் அம்மாவைக் காணச் சென்றாள் சசிகலா. தான் படும் கஷ்டங்களை அவள் விவரித்தபோது, தந்தையற்ற அக்குடும்பத்தார், சமூக ஏசல்களுக்குப் பயந்து 'குடும்பம் என்றால் கொஞ்சம் கசமுச இருக்கத்தான் செய்யும்... கல்யாணமான பெண் தன் கணவனுடன் வாழ்வதுதான் கௌரவம்' என்று 'அறிவுரை' கூறி அவளைத் திப்டூருக்கு அழைத்துச் சென்றனர்.

உள்ளூர் எம்.எல்.ஏ. சந்திரசேகரையா உள்ளிட்ட பல பெரிய மனிதர்களின் முன்னிலையில் சசிகலாவின் மாமனார், மாமியாரிடம் நயமாக எடுத்துச் சொல்லி, அவர்களிடமிருந்து 'மருமகளை இனிமேல் நன்றாக நடத்துகிறோம்' என்று வாக்குறுதியும் பெற்று, அவளை அவர்களிடம் ஒப்படைத்

துத் திரும்பினர்.

ஆனால் சசிகலாவின் துன்பங்கள் விடிய வில்லை. மாறாக அவளைத் தற்கொலைக்கே தூண்டின! ஓரிரு மாதங்களில் சசிகலா விஷத்தைக் குடித்து விட்டதாக ஒரு செய்தி! அவளை மருத்துவ மனையில் சேர்த்து, உட னடி சிகிச்சை அளித்துப் பிழைக்க வைத்து விட்டனர் புகுந்த வீட்டினர். ஆனால் இந்தச் சம்பவத்தை அவள் பிறந்த வீட்டாருக்கு அவர்கள் தெரியப்படுத்தவேயில்லை. உள் ளூர் எம்.எல்.ஏ. முதலியவர்கள் அவள் வீட் டிற்குச் சென்று விசாரிக்க முயன்ற போது, "எங்கள் குடும்ப விவகாரத்தில் யாரும் தலையிட வேண்டாம்'' என்று பேசி, அவமா னப்படுத்தி அனுப்பி விட்டனர் சசிகலாவின் மாமனாரும் மைத்துனரும். இந்த நிகழ்ச்சிக் குப் பிறகு ஊரே அவர்களுக்குப் பகையா யிற்று.

**அ**க்கம் பக்கத்தில் யாருடனும் பேசக் கூடாது என்று சசிகலாவுக்குத் தடை விதிக் கப்பட்டது. டாக்டரின் அப்பாவுக்குச் சொந்தமான அவர்களது பக்கத்து வீட்டில் ஒரு குஜராத்தி குடும்பம் குடியிருந்தது. சசி கலா அவர்களுடன் ஹிந்தியில் பேசித் தங் கள் வீட்டு மர்மங்களையெல்லாம் வெளிப படுத்திவிடுவாளோ என்ற பயத்தில், கெடு பிடி செய்து, அந்தக் குஜராத்தி குடும்பத் தைக் காலி செய்து கொண்டு போகும்படி செய்து விட்டனர். அதே போல சசிகலா வின் குடும்பத்தார் யாரேனும் வந்தால் அவள் அவர்களுடன் ஹிந்தியில் பேசக் கூடாது என்று முதலில் நிபந்தனை விதித்த வர்கள், போகப் போக அவள் அவர்களுடன் பேசுவதற்கே தடைவிதித்து விட்டனர்.

எதிர் வீட்டிலிருந்து சசிகலா எப்போதே னும் பெங்களூருக்கு போன் செய்து தன் அம்மாவுடன் பேசுவதுண்டு. சசிகலாவின் மாமனார் அவனுக்கு இனி அங்கிருந்து போன் செய்ய அனுமதி தரக்கூடாது என்று கூறிய தோடு எதிர் வீட்டுக் காரர்களுடன் சண்டை போட்டுப் பேச்சு வார்த்தையையே துண் டித்து விட்டார்.

தனது டைரியிடம்தான் இந்தச் சோகக் கதைகளைச் சொல்ல முடிந்தது சசிகலா வால்:

"இந்த வீட்டிற்குள்ளேயே நான் சிறை வைக்கப்பட்டிருக்கிறேன். நின்றால் தப்பு, உட்கார்ந்தால் தப்பு... அக்கம்பக்கத்தாரு டன் பேசினால் குற்றம்...! என்னை ஒரு வாயில்லாப் பிராணியாக்கி விட்டார்கள் இவர்கள். தாய் வீடு போகவும் எனக்கு அனுமதியில்லை. இந்த நரகத்திலிருந்து விடு தலை பெற நான் தற்கொலை செய்து கொண் டால் என் குழந்தையை இந்த யமன்களிடம் அல்லவா விட வேண்டும்...? இவர்களுக்குக் குழந்தை மேல் துளிக்கூட அன்பு கிடை யாதே...''

ஆனால் சசிகலாவின் மன உறுதி தளர்ந்து கொண்டே வந்தது. தற்கொலை சிந்தனைகள் அவள் டைரியின் அதிகப் பக்கங்களை ஆக் கிரமிக்க ஆரம்பித்தன...

"கடந்த பதினைந்து நாட்களாக இவர்கள் என்னைப் படுத்தும் சித்திரவதைக்கு எல்லை யில்லை... என்னால் தாங்க முடியவில்லை... அவர் என் தேகத்தை இயந்திர ரீதியில் பயன்படுத்தினாரேயொழிய இருதய பூர்வ மாக என்னை நேசிக்கவில்லை!

"ஒரு பெண் கணவன் வீட்டை விட்டுத் தாய்வீடு சென்றாலும் காலக்கிரமத்தில் அங்கே என்ன நடக்கும் என்றும் எனக்குப் புரிகிறது... கல்யாணமான பெண் கணவன் வீட்டை விட்டுப் பிணமாகத்தான் போக வேண்டுமோ...? நான் சாக வேண்டும்! ஆனால் தற்கொலை அவ்வளவு சுலபமில்லை... பல முறை முயன்றதில் கற்ற பாடம் இது.''

தற்கொலை சுலபமில்லை என்று எழுதிய சசிகலாவுக்கு எப்படியோ இறுதியில் அதுவே சாத்தியமாகிவிட்டது! கடந்த நவம்பர் ஏழாம் தேதி மதியம் பன்னிரண்டரை மணிக் குப் பள்ளியிலிருந்து திரும்பிய குழந்தை அனு, வீட்டுக் கதவைத் தட்டித் தட்டிப் பார்த்து, யாரும் திறக்காமல் போகவே, அகல விழிகளில் அழுகை ததும்ப நின்று கொண்டிருந்தாள். இதைப் பார்த்துவிட்டு, அக்கம் பக்கத்தாருள் ஒருவர் டாக்டரின் கிளினிக்குக்கு அவளைக் கொண்டு போய் விட்டார். குழந்தையுடன் வீடு திரும்பிய தகப் பனார் உள்பக்கமாய்த் தாளிடப்பட்டிருந்த பின்புறத்துக் கதவை எப்படியோ திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார். "அப்போது என் மனைவி பாத்ரூமில் தூக்கு மாட்டிக் கொண்டு இறந்து போயிருந்தாள்'' என்று கூறுகிறார் ராமசுவாமி.



• டாக்டர் ராமசுவாமி வீட்டின் முன் மக்கள் கூட்டம்.

• சசிகலாவின் டயரி: "சாவதற்கு முன் நான் என் கணவரை மன்னித்து விட முடியும்; ஆனால் என் மாமனார் மாமியாரைக் கடவுள்கூட மன்னிக்க மாட் டார்!''

मरने के पहले मैं अपने पति को तो माफ कर सकती हूँ मगर मेरी सास व ससुर को तो भगवान भी माफ नहीं करेगा।

ஆனால் திப்டூர் நகர மக்கள் இதை நம்பத் தயாராக இல்லை. "அது தற்கொலை அல்ல; கொலையே..." என்று ஒட்டுமொத்தமாக அடித்துச் சொன்னார்கள்.

"சசிகலா தூக்கு மாட்டிக் கொண்டதாகச் சொல்லப்படும் பாத்ரூமில், தூக்கில் தொங்கும் அளவிற்கு உயரமான இடமில்லை. மேலும் தூக்கில் தொங்கியதற்கான அடையாளம் முகத்தில் இல்லை" என்பது ஒருவரின் வாதம்.

"கொல்லைக் கதவை எப்படியோ வெளியிலிருந்து திறந்து கொண்டு நுழைந்தேன்" என்கிறார் டாக்டர். "அந்தக் கதவை அப்படித் திறப்பது சாத்தியமேயில்லை" என்றார் இன்னொரு திப்டூர் வாசி.

"போட்டோல பாருங்க... சசிகலாவின் இடுப்பில் ரத்தம் கட்டின அடையாளம் இருக்கு... சசிகலா இறப்பதற்கு முதல் நாள், போஸ்ட் ஆபீசுக்குப் போய் பெங்களூருக்கு போன் செய்தது அவள் மாமனாருக்குத் தெரிந்து போய், அவளைத் தடியால் நன்றாக அடித்தாராம்... குழந்தை அனுதான் சொல்லிச்சு..." என்று கண்ணீர் மல்கச் சொன்னார் ஒரு பெண்மணி..

பெங்களூருக்கு போன் செய்த சசிகலா தன்னை உடனே வந்து அழைத்துச் செல்லும்படி தாயிடம் கெஞ்ச, தாயும் அவள் அண்ணனை உடனே அனுப்பி வைத்தார். அண்ணன் திப்டூர் வந்து சேர்ந்த போது சசிகலாவின் மாமனார் மாமியார் வீட்டில் இல்லை. என்றும் இல்லாத வழக்கமாக சசிகலா புடைவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு உணவு பரிமாறினாள். உடலில் இருந்த காயங்களை மறைக்கத்தான் அப்படிப் போர்த்திக் கொண்டிருக்கிறாள் என்று சந்தேகித்த அவள் அண்ணன் அவளைப் பெங்களூருக்கு அனுப்பி வைக்கும்படி டாக்டரிடம் கேட்க, டாக்டர், தாங்கள் சந்தோஷமாக இருப்பதாகவும், மறுநாள் தர்மஸ்தலா முதலிய ஊர்களுக்கு யாத்திரை செல்ல இருப்பதாகவும், திரும்பியதும் சசிகலாவை அனுப்பி வைப்பதாகவும் கூறவே, சசியின் அண்ணனும் ஓரளவு சமாதானமடைந்து, கையோடு பெங்களூர் திரும்பி விட்டார். திரும்பிய சில மணி நேரங்களிலேயே தந்தியும் வந்தது: 'சசிகலா சீரியஸ்' என்று. உடனே திப்டூருக்கு போன் செய்த போது சசிகலா தற்கொலை செய்து கொண்டு விட்டதாகச் செய்தி கிடைத்தது. திப்டூருக்கு விரைந்த சசிகலாவின் அண்ணன், அன்றே 'சசிகலாவின் துர்மரணத்துக்குக் காரணம் அவளது கணவனும், மாமியார் மாமனாரும்' என்று போலீஸில் புகாரும் கொடுத்தார்.

சசிகலா இறந்த அன்று திப்டூர் நகரமே அந்த அசாதாரணத் துர்மரணத்துக்குக் காரணகர்த்தர்களான சசிகலாவின் புகுந்த வீட்டாரை எதிர்த்துப் பொங்கி எழுந்தது. டாக்டரின் வீட்டு வாசலில் ஆயிரக் கணக்கில் மக்கள் கூடிவிட்டனர். நான்கு இளைஞர்கள் போய்ப் போலீஸில் புகார் கொடுத்து, கையோடு போலீஸ்காரர்களை அழைத்து வந்தனர்.

'டாக்டரைக் கைது செய்யுங்கள்; அந்தப் பணப்பேய்க்கு விலங்கு மாட்டி, நிர்வாணமாகக் காவல் நிலையத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்' என்று உணர்ச்சிப் பெருக்குடன் கோஷங்கள் எழுந்தன. ஊர் மக்களின் வற்புறுத்தலின் பேரில் டாக்டர் ராமசுவாமி கைது செய்யப்பட்டதோடு இரவோடு இரவாகச் சசிகலாவின் உடல் போஸ்ட் மார்டத்துக்கு எடுத்துச் செல்லப் பட்டது.

மறுநாள், டாக்டர் ராமசுவாமி குடும்பத்தின் கேவலமான நடத்தையைக் கண்டிக்கும் முகமாக, இறுதிச் சடங்குகளைச் செய்ய மறுத்தனர் உள்ளூர் புரோகிதர்கள். சடலத்தைத் தூக்குவதற்கு ஆட்கள் கிடைக்கவில்லை. கைதான டாக்டரையும் அவருடைய பெற்றோரையும் ஜாமீனில் வெளிக் கொணர யாரும் தயாராயில்லை. உள்ளூர் வக்கீல்கள் அவர்கள் தரப்பில் வாதாட மறுக்க, சிக்கமகளூரிலிருந்து அதற்கென வந்த வழக்கறிஞர் ஊர் மக்களின் ஆவேசத்தைக் கண்டு பயந்து பின் வாங்க, இறுதியில் 'தும்கூரிலி

---

**ஜனத்தொகையை விட
வாக்காளர்கள் அதிகம்!**

சமீபத்திய 'நாகாலாந்து' தேர்தலில் ஆறு தொகுதிகளில் ஜனத்தொகையை விட வாக்காளர்கள் எண்ணிக்கை அதிகம்! உதாரணமாக 'திமாபூர் – 1' தொகுதியின் மொத்த ஜனத்தொகையே 19,367 தான் (1981 – ஆம் ஆண்டு கணக்குப் படி)! ஆனால் இங்கு வாக்காளர் பட்டியல் படி வாக்காளர்களின் எண்ணிக்கையோ 31,436! அதாவது, ஜனத்தொகையை விட வாக்காளர்கள் எண்ணிக்கை பன்னிரண்டாயிரம் அதிகம்!

தகவல்: சம்பத்குமாரி.
ஆதாரம்: 'ஸண்டே'





ருந்து வந்த வக்கீல் ஒருவர் அவர்களுக்காக ஆஜரானார். விசாரணையின் போது உள்ளூர் வக்கீல்கள் எல்லோரும் வெளிநடப்புச் செய்தார்கள். எந்த ரோட்டரி சங்கத்தில் உறுப்பினர் ஆவதற்காக மாமனாரிடமிருந்து பணம் வாங்கி வரும்படி சசிகலாவை டாக்டர் வற்புறுத்தித் துன்புறுத்தினாரோ, அந்த ரோட்டரி சங்கமே அவரை வெளியேற்றியது.

ஆமாம்! ரூப் கன்வர் உடன்கட்டை ஏறியதைச் செப்பிடு வித்தைபோல் பார்த்துக் கொண்டிருந்த அதே இந்தியாவின் இன்னொரு மூலையில்தான் ஒரு பெண்ணுக்கு இழைக்கப்பட்ட அநீதியை எதிர்த்து ஒரு நகரமே பொங்கியெழுந்தது! சரித்திரப் படைத்த அந்தத் திப்டூரில், சசிகலா இறந்து ஒரு மாதம் ஆனதையொட்டி, கடையடைப்பும், ஊர்வலமும் பொதுக் கூட்டமும் கடந்த டிசம்பர் ஏழாம் தேதியன்று நடத்தப்பட்டன.

மறுநாள், பெங்களூரிலிருந்து திப்டூர் வழியே கடூருக்குச் சென்ற கர்நாடக முதலமைச்சரை வீதியிலேயே நிறுத்தி, அமைதியான முறையில், நியாயம் கோரி கோஷங்கள் எழுப்பப்பட்டன. திருமதி சகுந்தலா ஹெக்டேயிடம் 'சசிகலாவை உங்கள் பெண் போல் பாவித்து நியாயம் கிடைக்க வழி செய்யுங்கள்' என்று திப்டூர் பெண்மணிகள் சிலர் கேட்டுக் கொண்டனர். ஹெக்டேயும், வழக்கு சி. ஓ. டி. (corpus of detectives) இடம் ஒப்படைக்கப்பட்டுள்ளதாகவும், அதன் ரிப்போர்ட் வந்ததும் என்ன செய்ய இயலும் என்பதைக் கவனிப்பதாகவும் கூறிச் சென்றார்.

சசிகலா கொலை செய்யப்பட்டாளா, தற்கொலையா என்று ஆராய்வது முக்கிய பிரச்னையல்ல. தற்கொலைதான் என்பது நிரூபணமானால் கூட தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்கு அவள் தள்ளப்பட்டாள்; அந்த அளவுக்கு அவள் கொடுமைப்படுத்தப்பட்டாள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இது கொலை புரிவதை விடப் பயங்கரமானது என்பதைச் சட்டம் ஒப்புக் கொள்ளுமோ இல்லையோ, நமக்குத் தெளிவாகத் தெரிகிறது.

"என் கணவரின் முகம் எவ்வளவு சிவப்போ, அவ்வளவுக்கு அவ்வளவு கறுப்பு அவர் மனம்..." என்று சசிகலா எழுதிய டைரி இப்போது போலீஸிடம் உள்ளது. டாக்டர் ராமசுவாமியும் அவர் பெற்றோர்களும் ஜாமீனில் வெளிவந்து வேறொரு ஊரில் இருக்கிறார்கள். அவர்கள் வீடு இருளடைந்து கிடக்கிறது. ஆனால் திப்டூர் நகர மக்களிடையே ஒரு புதிய வெளிச்சம் பிறந்துள்ளது. அதிலும் பெண்கள் மிகவும் விழிப்புடன் செயல்படுகிறார்கள். இதுவரையில் தனித்தனியே, அனேகமாக ஜாதி அடிப்படையிலேயே திப்டூரின் பல பாகங்களிலும் இயங்கி வந்த 'திப்டூர் மஹிளா மண்டலி' போன்ற சுமார் ஆறு மகளிர் மன்றங்கள் ஒருங்கிணைந்து 'திப்டூர் தாலுகா மஹிளா ஜாக்ருதி சமிதி' என்ற அமைப்பை ஏற்படுத்தியுள்ளன. வரதட்சணைக் கொடுமையை எதிர்த்துத் துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்டுள்ளன. இதன் எதிரொலியாக அவ்வூரில் சுமார் ஐந்தாறு குடும்பங்கள் தாமாகவே முன் வந்து, தங்கள் வீடுகளில் வரதட்சணை காரணமாகத் தகராறு இருந்ததாகவும், இனிமேல் அதையெல்லாம் மறந்து ஒழுங்காக நடந்து கொள்வதாகவும் சத்தியப் பிரமாணம் செய்துள்ளன.

சசிகலாவின் வாழ்க்கை மெழுகுவர்த்தியாகக் கரைந்து, குரூரமாய் முடிந்து போனது மிகப் பெரிய சோகம் என்றாலும் அந்தத் தியாகத்தின் பின் விளைவாக ஏற்பட்டுள்ள சமுதாய விழிப்புணர்ச்சி ஓர் ஆறுதலே.

— இருள்நீக்கி கணேசன்

புகைப்படங்கள்: லங்கேஷ் பத்திரிகை, சுந்தர் ஸ்டுடியோ, கன்னட பிரபா.





"பவள நாட்டு மன்னரைப் புகழ்ந்து பாடச் சென்றாயே, என்ன கொடுத்தார்...?"

"அவரும் ஒரு புலவராம். பதிலுக்கு என்னைப் புகழ்ந்து நாலு பாட்டுப் பாடித் திருப்பி அனுப்பி விட்டார்...!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

# 13

ரோஸலினின் திருமணத்துக்குப்போய் விட்டு வசந்தா வீட்டுக்குத் திரும்பிய போது, மாதவன் வாசல் கதவு அருகேயே ரொம்பவும் கலைந்து போய்க் காத்திருந்தான்.

காய்ச்சல் அதிகமாகிவிட்டதோ?

இல்லை, இருட்டி நேரமாகி விட்டதே, இவளை இன்னும் காணவில்லையே என்கிற கவலையா?

எதுவானாலும் வாசலிலேயே வந்து நிற்க வேண்டிய அவசியம் என்ன?

கேட்டைத் திறக்கும் முன்னர் கரிசனத்துடன் வசந்தா கேட்டாள்:

"என்ன மாது, ஏன் இப்படி காத்துல நிக்க நீங்க? காய்ச்சல் இன்னும் முழுசா நார்மலுக்கு வரலேன்றதை மறந்திட்டீங்களா?''

அவள் கேட்டதைலட்சியம்செய்யாதவன் போல மாதவன் பதிலுக்குப் படபடத்தான்.

''கொஞ்சம் சீக்கிரமா வந்திருக்கக் கூடாதா வசு? ஒரு மணி நேரமா நான் இங்கே தவியா தவிச்சுக்கிட்டு இருக்கேன்...

வசந்தா தலையைச் சாய்த்து, லேசான புன்சிரிப்போடு ஏறிட்டாள். பின், அவன் கையைப் பற்றி வீட்டுக்குள் அழைத்துப் போனாள்.

''நாந்தான் பத்திரமா வந்திடறேன்னு சொன்னேன் இல்லே? எதுக்குத் தவிக்கணும்? நீங்க கவலைப்படுவீங்கன்னுதான் விருந்துக்குக்கூடப்போகாம, சர்ச்சுலேர்ந்தே நேரா வந்திட்டேன்...''

''அதெல்லாம் இருக்கட்டும் வசு... ஊர்ல அம்மாவுக்கு உடம்பு சரியில்லையாம்... சேதி கேட்டதுலேர்ந்து என்னமோ, ஏதோன்னு ரொம்பத் தவிப்பா இருக்கு...''

மாதவன் காத்திருந்ததும், தவித்ததும் தனக்காக அல்ல என்பது புரிந்ததும் வசந்தா நிமிர்ந்து கேள்விக்குறியோடு அவனைப் பார்த்தாள்.

"உங்கம்மாவுக்கா? உடம்பு சரியில்லையா? யார் சொன்னாங்க?''

''ப்ச்... நூறு கேள்வி கேக்காதே வசு... இப்ப உடனே நாம ரெண்டு பேரும் ஊருக்குப் போயாகணும். பஸ்ஸோ, ரயிலோ, இல்லே டாக்ஸியானாலும் — எது கிடைக்குதோ அதுல போயிடலாம். விவரமெல்லாம் அப்புறமா சொல்றேன்... முதல்ல கிளம்பற வழியைப் பாரு...''

"இருங்க... இருங்க... ஒரு அஞ்சு நிமிஷம் உக்காந்து பேசிடறதால நாழி ஆயிடாது... எனக்கு ஒண்ணுமே புரியலே... உங்கம்மா உடம்புக்கு என்ன? சொல்லுங்க... ப்ளீஸ்.''

மாதவன் எரிச்சலோடு அவள் கையை உதறிவிட்டு உள்ளே சென்று அங்கிருந்தபடியே கத்தினான்.

"நிலைமை புரியாம சொல்லு, சொல்லுனு? ரெண்டு ரெண்டு செட் துணிமணி எடுத்துப் பெட்டில வெச்சுக்கிட்டுக் கிளம்பற வழியைப் பாரு வசு...''

"சரி... கிளம்பறேன்... ஆனா, நம்ப கல்யாணத்துக்கு அப்புறம் நாம அவங்களை இன்னும் பார்க்கவே இல்லே... 'உங்ககிட்டே ஆசீர்வாதம் வாங்கிக்க நாங்க வரலாமா?'ன்னு' கேட்டு நீங்க எழுதின லெட்டருக்குக் கூட அவங்க பதிலே போடலே... இப்ப திடும்னு நாமா போனாலும், 'வீட்டுக்குள்ளேயே நுழையாதீங்க'ன்னு துரத்தி விட்டுட்டாங்கன்னா என்ன செய்யறது? ராத்திரி நேரம் வேற... இதெல்லாம் கொஞ்சம் யோசனை பண்ணிக்கிட்டுக் கிளம்பறது நல்லதில்லையா?''

வசந்தா சொல்வதில் உண்மை இருக்க, முழுசாய் ஒரு நிமிஷம் யோசனையோடு நின்ற மாதவன், மெதுவாகப் பேசினான்.

''அப்படியெல்லாம் செய்ய மாட்டாங்கன்னு தோணுது வசு... நுழையக் கூட விடமாட்டேன்ற முடிவோட இருக்கறவங்கன்னா, அப்பாவே போன் பண்ணி விஷயத்தைச் சொல்லியிருப்பாங்களா?''

''அப்பாவா? எப்ப போன் பண்ணினாங்க? எங்கே பண்ணினாங்க?''

''எங்க ஆபீஸுக்குத்தான்... பாங்க் மூடற சமயத்துக்கு போன் வந்திச்சாம். எனக்கு உடம்பு சரியில்லே, ரெண்டு நாளா லீவுன்னு சொன்னதும், 'இங்கே அவங்க அம்மாவுக்கும் உடம்பு சரியில்லே, உடனே மாதுவைப் பார்க்கணும்ங்கறாங்க. தயவு பண்ணி எப்படியாவது செய்தியைத் தெரிவிச்சு அவனை வரச் சொல்லிடுங்க'ன்னு அப்பா கெஞ்சிக் கேட்டுக்கிட்டாராம். உனக்கு விஷயத்தைச்

## வேரில்லாத மரங்கள்



சொல்லிடலாம்னு உங்க ஆபீஸுக்கு போன் பண்ணியிருக்காங்க... நீ பர்மிஷன் போட்டுட்டுப் போயிட்டேன்னு தெரிஞ்சப்புறம் என்ன செய்யறதுன்னே புரியலியாம்...''

''இதெல்லாம் உங்களுக்கு யாரு சொன்னாங்க?''

''பாங்க் பர்ஸனல் ஆபீஸர் கேசவன்தான்... அவருதான் அப்பாகூட போன்ல பேசினாராம்... வேறே வழியில்லாம, ஆபீஸ்லேர்ந்து வீட்டுக்குப் போற வழியில இங்கே நேர்லே வந்து விஷயத்தைச் சொல்லிட்டுப் போனாரு...''

''அம்மாவுக்கு என்ன உடம்புன்னு சொன்னாரா?''

''அப்பாதான் சொல்லலியாம். இல்ல கேசவன்தான் என்னைக் கவலைப்படுத்த வேணாம்னு தெரியாதுன்னு சொல்றாரோ... தெளிவா ஒண்ணும் புரியல... ஆனா, 'காஞ்சிபுரம் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரியில சேர்த்திருக்கேன்; மாது... மாதுன்னு புலம்பிக்கிட்டே இருக்காங்க'ன்னு அப்பா சொன்னாங்களாம். ஆஸ்பத்திரியில சேர்க்கிற அளவுக்குன்னா ஏதோ பெரிசாத்தான் வந்திருக்கும்... அதான் சொல்றேன், நாம ரெண்டு பேருமே போய்ப் பார்க்கலாம்னு...

''பார்க்கலாம்தான்... ஆனா, இப்ப நான் இருக்கிற நிலைமையில பஸ்ல போக முடியுமான்னு தெரியல. ஏழு மாசத்துக்கு மேல ஆயிடுச்சுன்னா பஸ்ல ரொம்ப தூரம் பயணம் செய்யறது கூடாதுன்னு டாக்டர் சொன்னதை நினைச்சுப் பார்க்கறப்போ தயக்கமா இருக்கு... நாளைக்கு வேணா டாக்டர்கிட்டே ஒரு வார்த்தை கேட்டுக்கிட்டு...''

மாதவன் கோபத்துடன் கத்தினான்.

''அப்ப போகவே வேணாம்னு சொல்றியா? அம்மா ஆஸ்பத்திரியில இருக்கிறப்போகூட...?''

அவனை முடிக்க விடாமல் வசந்தா அவசரமாய்ப் பேசினாள்.

''இருங்க... என்னத்துக்காகக் கோவப்படறீங்க? என் நிலைதான் வர முடியாதுன்னு சொன்னேனே தவிர, நீங்க போக வேணாம்னு தடுக்கலியே! கேளுங்க மாது. இப்படி பேசிக்கிட்டே இருந்தால் நேரமாயிடும்... இப்ப நீங்க மட்டும் முதல்ல போயிட்டு வாங்க... இருக்கிற நிலைமையில என்னை வேறே பார்த்து உணர்ச்சிவசப்பட்டுட்டாங்கன்னா என்ன பண்றது? கொஞ்சம் குணமானப்புறம் ரெண்டு நாள்ல நானும் வர்றேன்... முதல்ல நீங்க போயிட்டு வாங்க... கிளம்புங்க, நாளைக்குக் காலையில மறக்காமல் எனக்கு ஆபீஸுக்கு போன் பண்ணி அம்மாவுக்கு எப்படி இருக்குன்னு சொல்லுங்க...''

அவன் கையை உலுக்கி மீண்டும், ''கிளம்புங்க மாது....'' என்றாள். லேசான கவலையோடு ''ஸ்வெட்டர் எடுத்து வெக்கறேன்... மறக்காம போட்டுக்குங்க... மாத்திரைகளை ஒழுங்காச் சாப்பிடுங்க... அம்மாவைப் பத்தி விசாரப்படறதுல உங்களைக் கவனிச்சுக்கத் தவறிடாதீங்க'' எனப் பேசியவளின் கையை மாது பிடித்துக் கொண்டான்.

''அதெல்லாம் இருக்கட்டும்... உன்னைத் தனியா விட்டுட்டு எப்படிப் போறது வசு?''

''சரியாப் போச்சு... இப்ப அதை நினைச்சுத் தயங்கறீங்களா? ஏதாச்சும் தேவைன்னா பக்கத்துப் போர்ஷன்காரங்களைக் கூப்பிட்டுக்கறேன்... நீங்க கிளம்புங்க...''

முதலில் தயங்கினாலும் அம்மாவுக்கு என்னவாயிற்றோ என்ற கவலை மனசு முழுக்கப் பரவியிருந்ததில், 'பத்திரம், பத்திரம்' என்று பத்து தரம் கூறி, தயக்கத்தை உதறிவிட்டு மாதவன் கிளம்பிப் போனான்.

**ம**றுநாள் காலை வசந்தாவின் அலுவலகத்துக்கு போன் செய்து, ''...அம்மாவுக்கு ஹார்ட் அட்டாக் ஏற்பட்டிருக்கு வசு... பயப்படற கட்டத்தைத் தாண்டிட்டாலும் டாக்டருங்க பார்வையிலேயே இன்னும் மூணு வாரமாச்சும் இருக்கணும்ங்கறாங்க. என்னைப் பார்த்ததுல ரொம்ப உணர்ச்சிவசப்பட்டாங்கதான். ஆனாலும், கையைப் பிடிச்சுக்கிட்டு, 'இனிமே எனக்கு ஒண்ணும் இல்லே, நீதான் வந்திட்டியே'ன்னு உறுதியாப் பேசினாங்க... நான் நேர்ல வந்து விவரமாச் சொல்றேன். ஜாக்கிரதையா இரு'' என்றவன் —

பெண்டாட்டி யாருடைய துணையும் இன்றித் தனித்திருப்பது மனசாகாமல் தடக்கென்று அன்று மாலையே ஏழு மணி அளவில் நேரிலேயே வந்தும் விட்டான்.

''...நேத்துதான் நீ தனியா இருந்திட்டே. இன்னிக்கும் இருக்க வேணாம்னுதான் வந்திட்டேன் வசு. ராத்திரி நேரத்துல வலி எடுத்தா என்ன பண்ணுவே? அம்மா, அப்பாவுக்கு நீ உண்டாகி



**சிவசங்கரி**



"தலைவர் ரொம்பப் புத்திசாலி!"

"அப்படி என்ன செஞ்சார்?"

"சின்ன வீடு 'செட் - அப்' கூட பினாமி பேர்லேதான் வெச்சிருக்காரு!"

— அருண்.

யிருக்கிறதுல ஏக சந்தோஷம்! 'தனிச்சு விடாத டா'ன்னு அவங்களும் சொல்லக் கொண்டு தான் வந்தேன்..."

"அம்மாவை வீட்டுக்கு எப்ப அழைச்சுட்டுப் போலாம்னு டாக்டர் சொன்னாரா?"

"இன்னும் இல்லே... ரெண்டு மூணு வாரமாவது அங்கேயே இருக்க வேண்டி வரும்னு தான் நெனைக்கறேன்... அபாயக் கட்டத்தைத் தாண்டிட்டாலும், இன்னும் கொஞ்ச நாளைக்கு எச்சரிக்கையாத்தான் இருக்கணு மாம்..."

"நிலைமை அப்படி இருக்கறப்ப நீங்க ஏன் அதுக்குள்ள வந்திட்டீங்க? உங்க ஆபீஸ்ல கூட 'அவர் வர்றதுக்கு ஒரு வாரமாவது ஆவும்'னு சொல்லி வெச்சிருக்கேனே!"

"அம்மாவைப் பத்திக் கவலைப்படற அதே நேரத்துல உன்னை நினைக்காம நான் இருக்க முடியுமா வசு? நிறைமாசப் பிள்ளைதாச்சிப் பெண்ணைத் தன்னந்தனியா விட்டுட்டு... எப்படி வசு? இருப்புக் கொள்ள மாட்டேங்குதே! பேசாம உன்னையும் லீவு போட வெச்சிட்டு என்னோட கூட்டிட்டுப் போயிட லாம்னு பார்த்தா, ஆஸ்பத்திரியிலயும் நீ இருக்க முடியாது... கிராமத்துலயும் தனியா இருக்கிறது கஷ்டம்... அதுக்கு இங்கேயே பழகின இடத்துல தங்கிக்கறது தேவலைன்னு தோணுது. அப்பாகிட்டப் பேசினேன்... 'பகல்லே வேணா நீ வந்து அம்மாவைப் பார்த்துக்க, ஊர்லேயும் அறுப்பு நேரம்... நான் ராத்திரி தங்கிக் கவனிச்சுக்கறேன்'னு சொல்றாரு. நாளைலேருந்து பதினைஞ்சு நாட்கள் லீவு போட்டுட்டு நெதைக்கும் காலைல போயிட்டு, சாயங்காலம் வந்திடற தைத் தவிர வேறே வழி இல்லை..."

வசந்தா யோசனையுடன் நகத்தைக் கடித்தாள்.

"நெதைக்கும் இப்படி மெட்ராஸுக்கும் காஞ்சிபுரத்துக்குமா அல்லாடினால் உங்களுக்கு ஒத்துக்குமா? பேசாம அங்கேயே தங்கிடுங்களேன்... அம்மாவுக்கு நல்லா குணமானதும் திரும்பி வந்தால் பத்தாதா?"

மாதவன் தீர்மானமாய்த் தலை அசைத்தான்.

"முடியாது வசு... உன்னைத் தனியா விட்டுட்டு அங்கே நிம்மதியா இருக்கவும் முடியாது. அங்கே போகாமயே இருக்கவும் என்னால முடியாது... அம்மாவையும் அப்பாவையும் பார்த்தால் ரொம்பக் கஷ்டமா இருக்கு. பாவம், அவங்களுக்கும் என்னை விட்டா வேற யாரு இருக்காங்க? அவங்களை மீறி நான் கல்யாணம் செய்துக்கிட்டதைப் பத்தியெல்லாம் பேச்சே எடுக்காம, பழைய படியே எங்கிட்ட எத்தனை அன்பா இருக்காங்க தெரியுமா? அதை இத்தனை மாசமா எப்படிக் காட்டிக்காம வீம்பா இருந்தாங் கன்னுதான் ஆச்சர்யமா இருக்கு! அந்த அன்புக்காகக் கொஞ்சம் சிரமப்பட்டால் தான் என்ன?"

ஆனால் இட்டமிட்டபடி மறுநாளிலிருந்து முடிவெடுத்ததைச் செய்து காட்டுவதற்குள் மாதவன் திக்குமுக்காடித்தான் போனான்.

தினம் காலையில் எழுந்து ஆறு மணிக்கெல்லாம் புறப்பட்டுக் காஞ்சிபுரம் போய், மாலை எட்டு மணிக்குள் திரும்பி வருவது என்பது லேசான காரியமாக இல்லை.

அதுவும், காய்ச்சல் அடித்துப் பலவீனமாக இருந்த உடம்பில் இப்படி தினம் பிரயாணம் செய்யும் அலுப்புமாகச் சேர்ந்து கொண்டுவிட்டதில், நாலு நாட்கள் போவதற்குள் அவன் சோர்ந்துதான் போனான்.

ஐந்தாம் நாள் காலை, படுக்கையை விட்டு எழவே முடியாதபடி உடம்பு சண்டி பண்ணியது.

தூக்கம் கலைந்தும்கூட கண்களைத் திறக்காமல் படுத்தபடியே கிடந்தான்.

கணவனுக்காகக் காப்பி எடுத்து வந்த வசந்தா, அவன் இன்னமும் எழுந்திருக்காமல் இருப்பதைப் பார்த்து, காப்பியைத் தரையில் ஓர் ஓரமாக வைத்துவிட்டு அவன் பக்கத்தில் படுக்கையில் அமர்ந்து கொண்டாள்.

"மாது..."

"ம்."

"முழிச்சுட்டீங்களா? காப்பியைக் குடிச்சிட்டுக் கிளம்புங்க, நேரமாவுது..."

"ஆவட்டும் வசு, என்னால இப்ப எழுந்திருக்க முடியாது..."

"முடியாதா? அப்ப இன்னிக்கு ஊருக்குப் போகலையா?"

"போகணும்தான். ஆனா எழுந்திருக்கவே முடியலை... முதுகு, இடுப்பெல்லாம் ஒடிஞ்சி போயிட்டாப்பல வலிக்குது... பழக்கமே இல்லாம தினம் இவ்வளவு தூரம் பஸ்ல பிரயாணம் செய்ய முடியலே இல்லே வசு..."

வசந்தா பதிலேதும் சொல்லாமல் சற்று நேரம் அவனையே பார்த்தாள். பிறகு, "திரும்பிப் படுங்க... நான் கொஞ்சம் முதுகைப் பிடிச்சு விடறேன்..." என்று அவனைப் புரட்டிப் படுக்க வைத்தாள்.

இடுப்பிலிருந்து ஆரம்பித்து முதுகையும் தோளையும் இதமாகப் பிடித்துவிட்டபோது, நாலைந்து நாட்களாய் நினைப்பில் எட்டிப் பார்த்துக் கொண்டேயிருந்த விஷயம் இப்போதும் தலைதூக்குவதை வசந்தாவால் புரிந்து கொள்ள முடிந்தது.

அன்று சர்ச்சில் அத்தம்மாவைப் பார்த்ததைப் பற்றி மாதவனிடம் இப்போது சொன்னால் என்ன என்று தோன்றியது.

வந்தவுடன் அவனிடம் சொல்லிவிட வேண்டும் என்று முதலில் நினைத்தது நடக்காமல், அவன் உடனே ஊருக்குப் போகும் படி ஆகிவிட்டது.

தொடர்ந்து, இருவரும் சாதாரணமாகப் பேசிக் கொள்வதற்குக்கூட நேரமில்லாமல் மாதவன் இரவு வருவதும், காலை அவசரமாக எழுந்துபோய் விடுவதுமாக இருந்தான்.

இன்று வசமாய்ச் சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறதோ!

வசந்தா மெதுவாக ஆரம்பித்தாள்.

''நீங்க இப்படி தினம் போயிட்டுப் போயிட்டு வர்றது எனக்கு வேதனையா இருக்கு மாது...''

''அதுக்காக, 'நா தனியா இருக்கேன்'னு பழையபடி பேச ஆரம்பிச்சிடாதே வசு... உன்னைத் தனியா விட முடியாதுனுதான் நா ஏற்கெனவே சொல்லிட்டேன்...''

''ப்ச்... முழுசா கேட்டுட்டுத்தான் பேசுங்களேன். அன்னிக்கு ரோஸலின் கல்யாணத்துல அத்தம்மாவைப் பாத்தேன்...''

''உன்கூட பேசினாங்களா?''

''பேசாம? பிழியப்பிழிய அழுதுட்டாங்க.. 'நீங்க செல்லம் கொடுக்கக் கொண்டுதான் வசந்தா அப்படி என் மானம் போகும்படி செய்திட்டா'னு அண்ணன் எந்நேரமும் ஏசிக்கிட்டே இருக்காராம். 'போக்கிடம் இல்லாத அனாதையாகி, எல்லார்கிட்டயும் பேச்சு கேக்க வேண்டி வந்திடுச்சே'னு வேதனைப்பட்டுக்கிட்டாங்க. எம்மேல அவ்வளவு ஆசையா இருந்தவங்கள இப்பிடி கஷ்டப்படுத்திட்டமேனு எனக்கு உறுத்தலா இருக்கு மாது...''

. . . . . . .

''நா ஒண்ணு சொன்னா கேப்பீங்களா?''

''என்ன?''

''அத்தம்மாவ நம்ம வீட்டுலயே வந்து இருக்கச் சொல்லிட்டா என்ன?''

மாதவனின் அதிர்ச்சி வெளிப்படையாகத் தெரிந்தது.

''நம்ம வீட்டுலயா? அதெப்படி முடியும் வசு? அவங்களுக்கு இங்கே சரிப்பட்டு வருமா?''

''வரும்... எங்கிட்ட அலாதிப் பிரியம் வெச்சிருக்காங்க. எனக்காக எது வேணா செய்வாங்க மாது.. எனக்கும் மனுஷங்களே இல்லாம இப்பிடி எல்லா வேலைகளையும் செய்றது கஷ்டமா இருக்கு. பிரசவ நேரம் வேற நெருங்கிக்கிட்டே இருக்கு... குழந்தையை, வீட்டைக் கவனிக்கனு பொறுப்பா ஒரு பெரியவங்க நம்மகூட இருந்தா நல்லது தானே? குழந்தை பிறந்தப்பறம்கூட வேலையை விட வேணாம்னு முடிவு பண்ணியிருக்கோமே, அப்ப குழந்தையை யாரு பாத்துப்பாங்க மாது? அத்தம்மானா நல்லா கவனிச்சுப்பாங்க... என்னையே எடுத்து வளர்த்தவங்கதானே!''

மாது எழுந்து உட்கார்ந்து கொண்டு அவளை அழுந்த ஏறிட்டான்.

''எல்லாம் சரிதான், அவங்க இங்கே வருவாங்களா?''



''என்ன உன் வீட்டில உன் மாமியார் மைத்துனர்கள் எல்லாம் வந்திருக்காங்க, எதுவும் விசேஷமா...?''

''என் மனைவிக்கும் எனக்கும் நடக்கிற சண்டைக்காக என் மாமனார் அனுப்பியிருக்கிற அமைதிப் படை அது!''

— கடுவை கோபால்சாமி.

---

''கட்டாயம் வருவாங்க. 'வீட்டுக்குப் பெரியவங்களா வந்து எங்களோட தங்கிக்குங்க அத்தம்மா'ன்னு கெஞ்சிக் கேட்டுக்கிட்டோம்னா, நிச்சயம் வருவாங்க... உடனடியா அவங்களை வரச் சொல்லிட்டோம்னா, எனக்கு நல்ல துணையா இருப்பாங்க... நீங்களும் நிம்மதியா காஞ்சிபுரத்துலேயே பத்து நாளு தங்கி அம்மா உடம்பு நல்லாத் தேறினப்புறம் வந்தால் போதும். இந்த அலைச்சல் இருக்காது உங்களுக்கும்...''

இதுவரை அசுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டு வந்தவன், வசந்தா கடைசியாகச் சொன்னதைக் கேட்டுச் சற்றே நிமிர்ந்தான்.

பெற்றவர்களுக்கு அருகில் இருந்து கவனிக்கக் கூட முடியவில்லையே என்ற ஏக்கம் தீர இப்படி ஒரு வழி இருக்கிறதோ?

அத்தம்மா வருவது எல்லா விதத்திலும் வசதி என்பதோடு, 'என்னைப் பெற்றவர்களோடு நான் சமாதானமாகிவிட்ட பிறகு வசந்தாவையும் அவள் உறவினரோடு இணைப்பது நியாயமான செய்கை அல்லவா?' என்ற கேள்வியும் எழுந்ததில், ''நீ சொல்றது சரிதான். வீட்டுக்குப் பெரியவங்களா ஒருத்தங்க இருக்கிறது நல்லது தான் வசு... அத்தம்மாவை இங்கே வந்து இருக்கச் சொல்லிக் கேட்டுக்க...'' என்று மனப்பூர்வமாகப் பச்சைக் கொடி காட்டினான்.

அன்று மதியமே சர்ச்சில் சொல்ல வேண்டியவர்களிடம் சொல்லி, அத்தம்மாவை எப்படியோ மாலையே சந்தித்து வசந்தா அழைப்பு விடுக்க,

மஹா சந்தோஷத்தோடு மறுநாளே அத்தம்மா தன் மூட்டை முடிச்சுக்களோடு வசந்தாவின் வீட்டில் வந்து இறங்க,

அந்த மூட்டை முடிச்சுக்களோடு முதல் முறையாக ஏசுநாதர் படமும், பைபிள் புத்தகமும், மெழுகுவர்த்தி ஸ்டாண்டுகளும் அந்த வீட்டுக்குள் நுழைந்தன.

(தொடரும்)

# மனசுதான் எழுதுகிறது

ஆபீஸ் விட்டு வெளியே வந்து எதிர்க் கடையில் காயத்ரி, 'தீர்விதா' பத்திரிகையை வாங்கிக் கொண்டாள். பஸ் ஸ்டாப்பில் நின்ற போது பிரித்துப் பார்த்தாள். அவள் கதை வெளியாகியிருந்தது.

வீட்டுக்கு இன்று நிச்சயம் விஸ்வநாதனின் கடிதம் வந்திருக்கும். காயத்ரிக்கு முன்னமே வாசித்து உடனே விமர்சனக் கடிதம் எழுதி விடுவான்.

தமயந்தி

விஸ்வநாதன்...

அவனது முதல் கடிதம் இன்னமும் நன்றாய் நினைவில் இருக்கிறது.

அன்புக்குரிய காயத்ரிக்கு,

உங்களுக்கு இதுவரை அறிமுகமில்லாத மனசு இதை எழுதுகிறது. மனசு எழுதுமா என்று நீங்கள் கேட்கிறீர்களா? ஆமாம். மனசு தான் எழுதுகிறது. கை வெற்றுக் கருவி.

உங்களுடைய 'கவிதைச் சொப்பனங்



கள்' என்ற கதையை வாசித்தேன். கொஞ்ச நேரம் நிச்சயமாய் என் மனசு அந்தத் தாள்களில் சிக்கிக் கிடந்தது. பத்திரிகை ஆபீஸ் மூலம் உங்கள் விலாசத்தைப் பெற்றுக் கொண்டேன்.

தாமிரபரணியும், அகஸ்தியர் அருவியும் மட்டுமே சிநேகிதமாய் இருந்த என் மனத்திற்கு உங்கள் எழுத்தும் சிநேகிதமாகி விட்டது. எழுத்தும் மனசும் தொடர்புடையது. எனவே — உங்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்ள விரும்புகிறேன். உங்களுக்கு ஆட்சேபனை யில்லா விட்டால்.

அன்புடன்
விஸ்வநாதன்.

இதே முகவரி எழுதியிருந்தான்.

ஒரு நிமிஷம் பிரமிப்பாயிருந்தது. இது நிஜமா என்கிற சந்தேகம். அதுவரை வந்த முதல் ரசிகர் கடிதம் என்ற ஆச்சரியம்.

மலைத்துப் போய் நின்றவளை அம்மா அதிசயித்துப் பார்த்தாள்.

''என்னாச்சுது காயத்ரி?''

காயத்ரிக்கு நிறைய அப்பாக்களை, அம்மாக்களைத் தெரியும். மகளுடைய அந்தரங்க வட்டத்தில் தலையிடும் பரமஜீவன்கள். அவளுக்கு வந்த கடிதத்தைப் பிரித்து வாசிக்கும் சந்தேக மனசுகள்.

இந்த அப்பா, அம்மா, அண்ணன் அப்படியில்லை. 'அது உன் வட்டம்' என்று விலகி விடும் சிநேகம். 'உன் விஷயங்களை நாங்கள் மதிக்கிறோம்' என்கிற நேசம். இந்த மாதிரி சமயங்களில் பெருமை நெஞ்சு முட்டிக் கொண்டு வரும்.

''எனக்கு வந்த இண்டர்வியூ 'கார்டைக் கூடச் சந்தேகப்பட்டுப் படிச்சுப் பார்க்கிறார்டி எங்கப்பா'' என்று அந்நியள் வருத்தப்படும் போது அலாக்காய்க் குதிக்க வேண்டும் போலிருக்கும். 'எங்கப்பாம்மா படிக்க மாட்டாங்க... தெரியுமா? என் சுதந்திரம், அந்தரங்கம் எல்லாம் எனக்கு மட்டுமே சொந்தம்.'' என்று எம்பத் தோன்றும்.

பஸ் வந்தது. ஏறிக் கொண்டாள். ஜன்னலோரமாய் உட்கார்ந்து, 'தீர்விதா'வை வாசிக்க ஆரம்பித்தாள்.

மனத்திற்குள் மறுபடியும் விஸ்வநாதன் எட்டிப் பார்த்தான்.

ஒவ்வொரு கதைக்கும் பக்கம்பக்கமாய் விமர்சனம் செய்வான்.

''இந்த வார்த்தையை அடிக்கடி நீங்கள் உபயோகப்படுத்தினாற் போலொரு பிரமை. ஏன்?''

நிறையையும் குறையையும் அச்சமின்றி அறிமுகப்படுத்தும் விமர்சனம்.

இரண்டு வாரங்களாய் அவனிடமிருந்து கடிதம் இல்லை. எங்கேயாவது ஊருக்குப் போயிருக்கலாம். இல்லை — உடம்பு சுகமில்லாமல் இருக்கலாம்.

**வீ**ட்டுக்குள் நுழைந்த போது அண்ணன் ஒரு கடிதத்தை எடுத்துக் கொடுத்தான்.

விஸ்வநாதன் தான்...

முகம் கழுவி, டிபன் சாப்பிட்டு விட்டுக்



### தொழிலாளிக்குக் கௌரவம்

தொழிலாளர்களின் யோசனைகளுக்கு மதிப்புக் கொடுத்து, அதன் பிரகாரம் தொழிற்சாலைகளில் சில சிக்கனங்களைக் கடைப்பிடித்ததனால் 1985 — ஆம் ஆண்டில் பிரிட்டனிலுள்ள நிறுவனங்கள் பதினைந்து கோடி ரூபாய்களுக்கு மேல் மிச்சம் பிடித்தன! யோசனைகளுக்கு அவற்றின் பயனுக்கேற்ப பரிசுகள் தரப்பட்டன.

— 'பிஸினஸ் லண்டன்' பத்திரிகையிலிருந்து.

— எம். கே. நாராயணன்.

கடிதத்தைப் பிரித்தாள்.

அன்புக்குரிய காயத்ரிக்கு,

நான் தான் விஸ்வம் எழுதுகிறேன். இந்த வாரத் தீர்விதாவில் உங்கள் கதை வாசித்தேன். தாமிரபரணியில் கால் நனைத்து, அதன் ஓரமாய் வளரும் காட்டுப் புற்களில் நடந்திருக்கிறீர்களா? இல்லையென்றால் — உங்கள் கதையை நீங்களே வாசித்துப் பாருங்கள். அந்தப் பரம சுகம் கிடைக்கும்.

ஆமாம் — ஏன் நீங்கள் கடிதமே எழுதவில்லை? நான் இதற்கு முன் 12.10.87 அன்று எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைக்கவில்லையா?

இல்லை — உங்கள் பெற்றோர் அதை உங்களிடமிருந்து மறைத்து விட்டார்களா? நியாயம் தான். உங்கள் பெற்றோரின் பயம் இந்தக் காலத்தில் தவிர்க்க முடியாததுதான். பெரும்பான்மையானவர்கள் உலகில் அப்படித்தான் — அப்படிப்பட்ட எண்ணத்துடன்தான் பழகுகிறார்கள். ஆனால்— எல்லோரும் அப்படியில்லை.

உங்கள் பெற்றோரிடம் அந்தப் பயம் அவர்களுக்கு வேண்டாம் என்று சொல்லுங்கள்.... ஓ! தப்பு... இந்தக் கடிதமும் உங்களிடமிருந்து மறைக்கப்பட்டால் எப்படி நீங்கள் சொல்ல முடியும்?

நிஜமாகவே உங்கள் பெற்றோர் அப்படி செய்திருந்தார்கள் என்றால் அதற்கு நான் வருத்தப்படுகிறேன். உங்களிடம் நான் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்ள ஆசைப்பட்ட காரணமே— யாருமில்லா உலகில் ஒரு மனசு துணை கிடைக்கும். என்ற நம்பிக்கையில்தானே தவிர வேறொன்றும் இல்லை. இலக்கியத்தைப் பரிமாறிக் கொள்ளத் துடிக்கும் ஆசையில்தான்.

நான் நல்லவன். மனசில் கல்மிஷமில்லை. தப்பில்லை. இந்தக் கடிதத்தையாவது உங்கள் பெற்றோர் உங்களிடம்



"அம்பது காசு போட்டதுக்காக, 'சாக்லேட்' தர்றியே? எதுக்கு?"

"அம்பது காசும், அதுக்கு அதிகமாயும் பிச்சை போடறவங்களுக்கு சாக்லேட் தர்றதாக, எங்கள் சங்கத்திலே தீர்மானம் போட்டு, நி றை வே ற் றி இருக்காங்க, சாமி!"

— ஆர். அப்துல் சலாம்.

---

கொடுப்பார்கள் என்று நம்புகிறேன். நீங்கள் உடனே, உடனே பதில் எழுதுவீர்கள் என்று நம்புகிறேன்.

இயந்திரத்தனமாய்ச் சுழலும் உலகில் எனக்கென்று மனம் விட்டுப் பேச யாருமேயில்லையா?

அன்புடன்,
விஸ்வநாதன்.

மனத்தின் உணர்வு மரத்துப் போனது. இப்படி கூடக் கடிதம் எழுத முடியுமா? எப்படி.... எப்படி எழுதினான்?

அவசரமாய் எழுந்து கடிதக் கட்டுகளைப் புரட்டினாள். 12.10.87 அன்று விஸ்வநாதன் எழுதிய கடிதம் இருந்தது. அப்படியானால்— அவனுக்கு நான் எழுதிய பதில் தான் கிடைக்கவில்லை.

கோபம் நெஞ்சுக்குள் மூண்டு அக்னிக் காடு வளர்ந்தது.

அம்மா எட்டிப் பார்த்தாள்.

"சாப்பிட வரியா காயத்ரி?"

"இல்லை. அப்புறம் வரேன்."

"வேலை ஏதாச்சும் இருக்குதா கண்ணு?"

"ஒரு கடிதம் எழுதணும்.

யாருக்கு, எதற்கு என்ற பதில் கேள்வியில்லை. இவர்களையா... இவர்களையா... அப்படி எழுதினான்?

காயத்ரி விஸ்வநாதனுக்கு எழுத ஆரம்பித்தாள்.

அன்புள்ள விஸ்வநாதனுக்கு,

இது காயத்ரி!

உங்கள் கடிதம் கிடைத்தது. தாமிரபரணியில் கால் நனைத்துக் கொண்டு, புற்களில் நடந்திருக்கிறீர்களா? என்று கேட்டிருந்தீர்கள். அக்னியில் கால் நனைத்துக் கொண்டு கங்குகளில் நடந்திருக்கிறீர்களா? இல்லையென்றால் எனக்கு நீங்கள் எழுதிய கடிதத்தின் பிரதி உங்களிடமிருந்தால் வாசித்துப் பாருங்கள். அந்தப் பரா... ஹிம்சை கிடைக்கும்.

என் பெற்றோரை உங்களுக்குத் தெரியுமா? பார்த்திருக்கிறீர்களா? பேசியிருக்கிறீர்களா? இல்லை. அவர்கள் உங்கள் கடிதத்தை என்னிடமிருந்து மறைத்ததை ஏதாவது விசேஷ சக்தி பெற்றுப் பார்த்தீர்களா? இதில் ஏதாவது ஒரு கேள்விக்கு "ஆமாம்" என்று உங்களால் பதில் சொல்ல முடிந்தால் — என் அக்னி அணைந்து விடும்.

ஆனால், எனக்குத் தெரியும் — இந்தக் கேள்விகளுக்கு உங்களால் 'ஆமாம்' என்று பதில் சொல்ல முடியாது.

உங்கள் கடிதம் எனக்குக் கிடைத்திருக்கிறது. நானும் பதில் எழுதியிருக்கிறேன். ஆனால் அது உங்களுக்குக் கிடைக்கவில்லை. ஏன் கிடைக்கவில்லை என்பதைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்கு முன், 'உங்கள் பெற்றோர் அதை மறைத்து விட்டார்கள்' என்று நான் குற்றம் சாட்டினேன் என்றால்... உங்கள் மனசு என்ன பாடுபடும்?

ஒருவரைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் குற்றம் சாட்டுவது எளிது. தன்னை நல்லவனாக்கிக் கொள்ள மற்றவரை வக்ரப்படுத்தும் மனசு நல்லதில்லை.

ஜெக்கப் ஃப்ராட்லியே வாசித்திருக்கிறீர்களா? எந்த மனிதன் தான் நல்லவன். நல்லவன் என்று அனாவசியத்திற்குத் தேவைப்படாமல் அலறுகிறானோ அவன் மனத்தின் அடித்தளத்தில் கெட்ட எண்ணம் மறைந்திருக்கிறது — தெரியுமா உங்களுக்கு?

இயந்திரத்தனமாய்ச் சுழலும் உலகில் ரிலாக்ஸ்ட்டாய் முதலில் உங்கள் மனத்துடன் பேசுங்கள். நல்ல புத்தி சொல்லி அதை மாற்றுங்கள். 'மனம் தான் எழுதுகிறது. கை வெற்றுக் கருவி' என்று உங்கள் முதல் கடிதத்தில் எழுதியிருந்தீர்களே. ஞாபகம் இருக்கிறதா? மனத்தை ஆரோக்கியமானதாய் மாற்றுங்கள்.

எனக்கு நீங்கள் செய்ய வேண்டிய பேருதவி ஒன்றிருக்கிறது— தயவு செய்து இனிமேல் எனக்குக் கடிதம் எழுதாதீர்கள்.

நீங்கள் எழுதினால் நான் பதில் எழுத வேண்டியிருக்கும். போலி பதிலை என்னால் உருவாக்க முடியாது— போலி நேசத்தைப் போல்.

இப்படிக்கு,
காயத்ரி.

எழுதி முடித்த போது அக்னியின் வீரியம் குறைந்திருந்தது. இனிமேல் விஸ்வநாதன் நிச்சயம் கடிதம் எழுத மாட்டான். தன் மனசை மாற்றிக் கொள்ள முயலுவான். கடவுளே—அவனுக்கு உதவி செய்.

கடிதத்தைக் கவரில் போட்டு, கோந்து வைத்து ஒட்டினாள். காலையில் போஸ்ட் செய்ய வேண்டும்.




## அத்தியாயம் 41
## "அதோ பாருங்கள்!"

சேனாதிபதி பூதி விக்கிரம கேசரி கூறிய செய்தியைக் கேட்டதும் இளவரசரின் முகத்தில் புன்னகை அரும்பியது.

"கடைசியாக என் உள்ளத்தின் போராட்டத்துக்கு ஒரு முடிவு வந்துவிட்டது போல் காண்கிறது" என்று மெல்லிய குரலில் தமக்குத் தாமே பேசிக் கொள்கிறவர் போலச் சொல்லிக் கொண்டார்.

பார்த்திபேந்திரன் கொதித்தெழுந்தான். "சேநாதிபதி! என்ன சொன்னீர்? இது உண்மைதானா? என்னிடம் ஏன் இதுவரையில் சொல்லவில்லை? இந்தப் பித்துக்குளிப் பெண்ணை நீர் நம்முடன் கட்டி இழுத்து வந்ததற்குக் காரணம் இப்போதல்லவா தெரிகிறது. மறுபடியும் கேட்கிறேன்; பழுவேட்டரையர்கள் இளவரசரைச் சிறைப்படுத்தி வரக் கப்பல்களை அனுப்பியிருப்பது உண்மையா?" என்று கேட்டான்.

"ஆம் ஐயா! இந்தப் பெண் கண்ணால் பார்த்ததாகவும் காதால் கேட்டதாகவும் கூறுவதை நம்புவதாயிருந்தால் அது உண்மைதான்!"

"ஆகா! அந்தக்கிழவர், திருக்கோவலூர் மிலாடுடையார், கூறியது உண்மையாயிற்று. பழுவேட்டரையர்களை உள்ளபடி உணர்ந்தவர் அவர்தான்! சேநாதிபதி! இத்தகைய செய்தியை அறிந்த பிறகும் ஏன் சும்மா இருக்கிறீர்? பராந்தக சக்கரவர்த்தியின் குலத்தோன்றலை, சுந்தர சோழரின் செல்வப் புதல்வரை, நாடு நகரமெல்லாம் போற்றும் இளவரசரை, தமிழகத்து மக்களெல்லாம் தங்கள் கண்ணினுள் மணியாகக் கருதும் செல்வரை, ஆதித்த கரிகாலருடன் பிறந்த அருள்மொழி வர்மரை, — இந்த அற்பர்களாகிய பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்திவர ஆட்களை அனுப்பும்படி ஆகிவிட்டதா? இனியும் என்ன யோசனை? உடனே படைகளுடன் புறப்பட்டுச் சென்று இளவரசரைச் சிறைப்படுத்த வந்தவர்களை அழித்து இந்த இலங்கைத் தீவிலேயே அவர்களுக்குச் சமாதியை எழுப்புவோம்!... பிறகு நாம் போட்ட திட்டத்தின்படி காரியத்தை நடத்துவோம்! கிளம்புங்கள்! இன்னும் ஏன் தயக்கம்?" என்று பார்த்திபேந்திரன் பொரி பொரித்துக் கொட்டினான்.

சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி அவனைப் பார்த்து, "பார்த்திபேந்திரா! நீ இப்படித் துடிதுடிப்பாய் என்று எண்ணித்தான் நான் முன்னமே இந்தப் பெண் கொண்டு வந்த செய்தியை உன்னிடம் சொல்லவில்லை. நன்றாக யோசித்துச் செய்ய வேண்டிய காரியம். அவசரப்படுவதில் பயனில்லை!" என்றார்.

"யோசனை செய்ய வேண்டுமா? என்ன யோசனை? எதற்காக யோசனை? இளவரசே! நீங்கள் சொல்லுங்கள். இனி யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? இதற்கு முன் ஏதேனும் தங்களுக்குத் தயக்கமிருந்தாலும் இனித் தயங்குவதற்கு இடமில்லையே? பழுவேட்டரையர்களைப் பூண்டோடு அழித்து விட வேண்டியதுதானே?"

அப்போது இளவரசர், "சேநாதிபதியின் மனத்தில் உள்ளதையும் தெரிந்து கொள்ளலாமே? ஐயா! தாங்கள் எதைப் பற்றி யோசிக்க வேண்டும் என்கிறீர்கள்?" என்று எவ்விதப் படபடப்புமின்றி நிதானமாய்க் கேட்டார்.

"தங்களைச் சிறைப்படுத்துவதற்கு... இந்த வார்த்தைகளைச் சொல்லவும் என் வாய் கூசுகிறது...... ஆனாலும் சொல்ல வேண்டியிருக்கிறது. தங்களைச் சிறைப்படுத்த வந்திருப்பவர்கள் சக்கரவர்த்தியின் கட்டளையோடு வந்திருந்தால் நாம் என்ன செய்வது? அப்போதும் அவர்களை எதிர்த்துப் போரிடுவதா?"

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன் கடகடவென்று சிரித்துவிட்டு, "அழகாயிருக்கிறது, தங்கள் வார்த்தை! சக்கரவர்த்தி சொந்தமாகக் கட்டளை போடும் நிலையில் இருக்கிறாரா? அவரையேதான் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்களே!" என்றான்.



ச்சமயத்தில் வந்தியத்தேவன், குறுக்கிட்டு, "பல்லவ தளபதி கூறுவது முற்றும் உண்மை. நானே என் கண்களால் பார்த்தேன். சக்கரவர்த்தியைச் சிறையில் வைத்திருப்பது போலத்தான் பழுவேட்டரையர்கள் வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய விருப்பமின்றி யாரும் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது; பேச முடியாது. நான் ஒரு வார்த்தை சொல்லத் துணிந்ததற்காக என்னை அவர்கள் படுத்திய பாட்டை நினைத்தால்... அப்பா! சின்னப் பழுவேட்டரையரின் இரும்புக் கை பற்றிய இடத்தில் இன்னும் எனக்கு வலிக்கிறது!" என்று கூறி, தன் மணிக்கட்டைத் தடவிக் கொண்டான்.

"அப்படிச் சொல், வல்லவரையா! உன்னை என்னமோவென்று நினைத்தேன். இளவரசருக்கும் சேநாதிபதிக்கும் இன்னொரு முறை நன்றாக எடுத்துச் சொல்!" என்றான் பார்த்திபேந்திரன்.

இளவரசர், "வேண்டாம்; அவர் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி விட்டார்!" என்று கூறி, வந்தியத் தேவனைப் பார்த்து, "ஐயா! நீர் அந்தப் பெண்ணைப் போய் அழைத்து வருவதாகச் சொன்னீரே! ஏன் இங்கேயே நின்று கொண்டிருக்கிறீர்? அவள் கொண்டு வந்த செய்தியை அவள் வாய்மொழியாகவே விவரமாகக் கேட்கலாம்! கொஞ்சம் கிறுக்குப் பிடித்த பெண் போலத் தோன்றுகிறது. எப்படியாவது நல்ல வார்த்தை சொல்லி அவளை இங்கே அழைத்து வாருங்கள்!" என்றார்.

"போகிறேன், இளவரசே! போய் அழைத்து வருகிறேன். ஆனால், பழுவேட்டரையர்களிடம் தாங்கள் சிறைப்படுவது என்பதை மட்டும் என்னால் சகிக்க முடியாது. என் உடம்பில் உயிர் இருக்கும் வரையில் அது நடவாத காரியம்!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் சென்றான்.

"சேநாதிபதி! தங்களுடைய கருத்து என்னவென்று சொல்லவில்லையே?" என்று அருள்மொழி வர்மர் கேட்டார்.

"என்னுடைய கருத்து இதுதான். பழுவேட்டரையர்கள் அனுப்பியிருக்கும் ஆட்களைத் தாங்கள் சந்திக்கக் கூடாது. பார்த்திபேந்திரர் கொண்டு வந்திருக்கும் கப்பலில் ஏறித் தாங்கள் உடனே காஞ்சிக்குப் போய் விடுங்

கள். நான் தஞ்சாவூருக்குப் போகிறேன். அங்கே சக்கரவர்த்தியை நேரில் பார்த்து உண்மை நிலைமையைத் தெரிந்து கொள்கிறேன்...''

''தஞ்சாவூருக்குத் தாங்கள் போவது சிங்கத்தின் வாயில் தலையைக்கொடுப்பது போலத்தான். போனால் திரும்பிவர மாட்டீர்கள். அப்படியே அங்குள்ள பாதாளச் சிறையில் போய் விடுவீர்கள். சக்கரவர்த்தியைப் பார்க்கவும் தங்களால் முடியாது......''

''என்ன வார்த்தை சொல்கிறாய்? என்னைச் சிறையில் அடைக்கக் கூடிய வல்லமையுள்ளவன் சோழ நாட்டில் எவன் இருக்கிறான்? சக்கரவர்த்தியை நான் சந்திக்கக் கூடாது என்று தடுக்கக்கூடிய ஆண்மை உள்ளவன் எவன் இருக்கிறான்? மேலும், அங்கே முதன் மந்திரி அநிருத்த பிரம்மராயர் இருக்கிறார்......''



''பிரம்மராயர் இருக்கிறார். இருந்து என்ன பயன்? அவருக்கே சக்கரவர்த்தியைப் பார்க்க முடிவதில்லை. இதோ அவருடைய சிஷ்யன் நிற்கிறானே, அவன் என்ன சொல்கிறான் என்று கேட்டுப் பார்க்கலாமே?''

சேநாதிபதி ஆழ்வார்க்கடியான் பக்கம் திரும்பி, ''ஆம்; இந்த வைஷ்ணவன் இங்கு நிற்பதையே மறந்து விட்டேன். திருமலை! ஏன் இப்படி மௌனமாக நிற்கிறாய்? சற்றுமுன் இளவரசர் சொன்னது போல் நீயும் ஊமையாகிவிட்டாயா?'' என்றார்.

''சேநாதிபதி! கடவுள் நமக்கு இரண்டு காதுகளைக் கொடுத்திருக்கிறார்; வாய் ஒன்றைத்தான் கொடுத்திருக்கிறார். 'ஆகையால் செவிகளை நன்றாக உபயோகப்படுத்து; பேசுவதைக் கொஞ்சமாக வைத்துக் கொள்' என்று என் குருநாதர் எனக்குச் சொல்லியிருக்கிறார். முக்கியமாக, பெரிய ராஜாங்க விஷயங்களைப் பற்றிப் பேச்சுகள் நடக்கும் இடத்தில் அந்த விரதத்தைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து வரச் சொல்லியிருக்கிறார்...''

''குருவின் வாக்கை நன்றாக நிறைவேற்றுகிறாய். நாங்களே இப்போது கேட்பதனால் சொல். உன்னுடைய யோசனை என்ன?''

''எதைப் பற்றி என் யோசனையைக் கேட்கிறீர்கள், சேநாதிபதி!''

''இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்த விஷயமாகத்தான். இளவரசர் இப்போது என்ன செய்வது உசிதம்? இலங்கையிலேயே இருக்கலாமா? அல்லது காஞ்சிக்குப் போகலாமா?''

''என்னுடைய உண்மையான கருத்

தைச் சொல்லட்டுமா? இளவரசர் அனுமதித்தால் சொல்லுகிறேன்.''

ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த அருள்மொழி வர்மர் ஆழ்வார்க்கடியானை ஏறிட்டுப் பார்த்து, ''சொல் திருமலை! தாராளமாய் மனத்தை விட்டுச் சொல்!'' என்று தைரியப்படுத்தினார்.

''இந்த இலங்கைத் தீவிலேயே மிகக் கடுமையான கட்டுக் காவல் உள்ள சிறைச்சாலை எது உண்டோ, அதைக் கண்டுபிடித்து, அதற்குள்ளே இளவரசரை அடைத்துப் போட வேண்டும்! வெளியில் பலமான காவலும் போட வேண்டும்!''

''இது என்ன உளறல்?'' என்றார் சேநாதிபதி.

''விளையாட இதுதானா சமயம்?'' என்றான் பார்த்திபேந்திரன்.

''நான் உளறவும் இல்லை; விளையாடவும் இல்லை. மனத்தில் உள்ளதைச் சொன்னேன். நேற்று இரவு இளவரசர் அநுராதபுரத்து வீதிகளின் வழியாக வந்து கொண்டிருந்தார். அவர் தலை மீது ஒரு வீட்டின் முன் முகப்பு இடிந்து விழுந்தது. பிறகு ஒரு வீட்டில் நாங்கள் படுத்திருந்தோம். நல்ல வேளையாக ஒரு காரியத்தின் பொருட்டு எழுந்து போய் விட்டோம். சற்று நேரத்துக்கெல்லாம் அந்த வீடு தீப்பற்றி எரிந்தது. இவையெல்லாம் உண்மையா, இல்லையா என்று இளவரசரையே கேளுங்கள்!''

இருவரும் இளவரசரை நோக்கினார்கள். அவருடைய முகபாவம் ஆழ்வார்க்கடியானுடைய கூற்றை உறுதிப்படுத்தியது.

''இந்த அபாயங்கள் எல்லாம் யாருக்காக நேர்ந்தவையென்று கேளுங்கள். என்னையோ அல்லது வந்தியத்தேவனையோ கொல்லுவதற்காக யாராவது வீட்டைக் கொளுத்துவார்களா?''

பார்த்திபேந்திரன் உடனே துள்ளிக் குதித்து, ''இளவரசரைக் கொல்லுவதற்குத்தான் யாரோ முயற்சி செய்கிறார்கள். இதனால் இளவரசர் என்னுடன் காஞ்சிக்கு வர வேண்டிய அவசியம் உறுதிப்படுகிறது!'' என்றான்.

''கூடவே கூடாது! தங்களுடன் இளவரசரை அனுப்பு





வதைக் காட்டிலும் பழுவேட்டரையனிடமே பிடித்துக் கொடுத்து விடலாம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''வைஷ்ணவனே! என்ன சொன்னாய்!'' என்று பார்த்திபேந்திரன் கத்தியை உருவினான்.

சேநாதிபதி அவனைக் கையமர்த்தி, ''திருமலை! ஏன் அவ்விதம் சொல்லுகிறாய்? பார்த்திபேந்திர பல்லவர் சோழகுலத்தின் அருந்துணைவர் என்று உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டார்.

''தெரியும் சேநாதிபதி, தெரியும்! சிநேகம் இருந்துவிட்டால் மட்டும் போதுமா?''

''பார்த்திபேந்திரர் சிநேகத்துக்காகவே உயிரையும் கொடுக்கக் கூடியவர் என்பதை அறிவேன், திருமலை!''

''அதுவும் இருக்கலாம். ஆனால் நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு மறுமொழி கூறச் சொல்லுங்கள். நாங்கள் முந்தாநாள் மாலை தம்பள்ளைக்கு அருகில் போய்க் கொண்டிருந்த போது இவருடன் இரண்டு பேர் வருவதைப் பார்த்தோம்! அந்த மனிதர்கள் யார், இப்பொழுது அவர்கள் எங்கே என்று இவரைக் கேட்டுச் சொல்லுங்கள்.''

பார்த்திபேந்திரப் பல்லவன் சிறிது திடுக்கிட்டுப் போனான். கொஞ்சம் தயக்கத்துடனே கூறினான்: — ''திரிகோணமலையில் அவர்களை நான் சந்தித்தேன். இளவரசர் இருக்குமிடத்தை எனக்குக் காட்டுவதாக அவர்கள் அழைத்து வந்தார்கள். அநுராதபுரத்தில் திடீரென்று மறைந்து விட்டார்கள். எதற்காகக் கேட்கிறாய், வைஷ்ணவனே! அவர்களைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?''

''தெரியும்! சோழ குலத்தை அடியோடு ஒழித்துவிடச் சபதம் செய்திருப்பவர்களில் அவர்கள் இருவர் என்று எனக்குத் தெரியும். நேற்று அநுராதபுரத்தில் அவர்கள்தான் இளவரசரைக் கொல்லப்பார்த்தார்கள் என்று ஊகிக்கிறேன்...... ஆகா! அதோ பாருங்கள்!'' என்று ஆழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டினான்.

அவன் சுட்டிக் காட்டிய இடம் அம் மண்டபத்திலிருந்து சற்றுத் தூரத்திலிருந்தது. நெருங்கிப் படர்ந்திருந்த மரங்களுக்கு இடையில் ஓர் அழகிய யுவதியும்யௌவன வாலிபனும்நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் வந்தியத்தேவனும் பூங்குழலியும்தான் என்பதும் ஊகிக்கக் கூடியதாயிருந்தது. பேசிக் கொண்டேயிருந்த வந்தியத்தேவன் சட்டென்று ஒரு சிறிய கத்தியைச் சுழற்றி வீசி எறிந்தான். கத்தி ஒரு புதரில் போய் விழுந்தது. 'வீல்' என்று ஒரு குரல் கேட்டது.

## அத்தியாயம் 42

# பூங்குழலியின் கத்தி

பாழடைந்த மண்டபத்திலிருந்து பூங்குழலியைத் தேடிக் கொண்டு சென்ற வந்தியத்தேவன் அவள் ஒரு மரத்தின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருப்பதைக் கண்டான். இலேசான விம்மல் அவளிடமிருந்து வந்து கொண்டிருந்தது.

குரலை மிகவும் நயப்படுத்திக் கொண்டு ''பூங்குழலி!'' என்றான்.

சத்தம் கேட்ட பூங்குழலி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

''நீதானா?'' என்று சொல்லி மறுபடியும் திரும்பிக் கொண்டாள்.

''நான்தான்! என் பேரில் உனக்கு என்ன கோபம்?''

''உன் பேரில் எனக்கு எந்தவிதக் கோபமும் இல்லை.''

''பின்னே ஏன் உனக்கு இவ்வளவு சிடுசிடுப்பு?''

''எனக்கு ஆண் பிள்ளைகளைக் கண்டாலே பிடிக்கவில்லை.''

''இளவரசரைக் கூடவா?''

பூங்குழலி திரும்பிக் கண்களில் கனல் எழும்படி வந்தியத்தேவனைப்

பார்த்தாள்.

"ஆமாம்; அவரைத்தான் முக்கியமாகப் பிடிக்கவில்லை!" என்றாள்.

"அப்படி அவர் என்ன குற்றத்தைச் செய்து விட்டார்?"

"என்னை அவருக்கு ஞாபகமேயில்லை. என்னை அவர் முகமெடுத்துக் கூடப் பார்க்கவில்லை."

"உன்னை அவருக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. நான் உன்னைப் பற்றிக் கூறியதும், 'ஓ! சமுத்திர குமாரியை எனக்குத் தெரியாதா?' என்றார்."

"பொய் சொல்லுகிறாய்."

"நீயே நேரில் வந்து கேட்டுக் கொள்."

"என்னை நினைவிருந்தால், ஏன் என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை?"

"அவர் பேசினார்; நீதான் மறுமொழி சொல்லாமல் ஓடி வந்து விட்டாய்."

"அந்த மாதிரி பேச்சை நான் சொல்லவில்லை. தெரிந்தவர்களைப் பார்த்தால் 'என்ன? ஏது?' என்று விசாரிப்பது கிடையாதா? — நீ சொல்லுவது பொய்! அவர் என்னை முகமெடுத்தே பார்க்கவில்லை."

"பூங்குழலி! அதற்கு ஒரு காரணம் இருக்கிறது."

"என்ன காரணம்?"

"இளவரசருக்கு இப்போது ரொம்பக் கஷ்ட காலம்."

"யார் சொன்னது?"

"எல்லா ஜோசியர்களும் சொல்லியிருக்கிறார்கள். குடந்தை சோதிடர் என்னிடமே சொன்னார்."

"உன்னிடம் என்ன சொன்னார்?"

"இளவரசருக்குக் கொஞ்ச நாள் வரையில் கஷ்டத்துக்கு மேல் கஷ்டமாக வந்து கொண்டிருக்கும் என்று சொன்னார். அவரைச் சேர்ந்தவர்களுக்கும் கஷ்டங்கள் வரும் என்று சொன்னார். இது இளவரசருக்கும் தெரியும். ஆகையினால் அவர் யாரும் தன்னோடு சிநேகிதமாக இருப்பதை விரும்பவில்லை. தனக்கு வரும் கஷ்டம் தன்னோடு போகட்டும் என்று நினைக்கிறார்."

"நீ மட்டும் ஏன் அவரோடு சிநேகமாயிருக்கிறாய்?"

"நீ சற்று முன் பார்க்கவில்லையா? என்னையும் சண்டை பிடித்துத் துரத்த அவர் பிரயத்தனப்படுகிறார். நடுச்சாலையில் ஒரு காரணமும் இல்லாமல் அவர் என்னோடு கத்திச் சண்டை போட்டார். நீங்கள் வந்ததினால் சண்டை நின்றது."

"அவர் துரத்தினாலும் நீ அவரை விட்டுப் போக மாட்டாயா?"

"மாட்டவே மாட்டேன். அவருக்கு வரும் கஷ்டங்களையெல்லாம் நானும் பகிர்ந்து அனுபவிப்பேன்."

"அவரை உனக்கு அவ்வளவு பிடித்திருக்கிறதா?"

"ஆமாம்; ரொம்ப ரொம்பப் பிடித்திருக்கிறது."

"எதனால் பிடித்திருக்கிறது?"

"காரணம் சொல்லத் தெரியாது. அவரைப்பார்த்தவுடனே அவர்பேரில் பிரியம் ஏற்பட்டு விட்டது."

"எனக்கும் அப்படித்தான்!" என்றாள் பூங்குழலி. உடனே தான் அவ்விதம் திறந்து சொல்லிவிட்டதைப் பற்றி வருந்தி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"உனக்கு இளவரசரிடம் பிரியம் என்று எனக்குத் தெரியும். ஆகையினால் உன்னை அழைத்துப் போக வந்தேன். என்னுடன் வா!"

"வரமாட்டேன்!" என்று பூங்குழலி அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள்.

"வராவிட்டால் பலவந்தமாக உன்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு போவேன்."

"அருகில்நெருங்கினால்இதோகத்தி இருக்கிறது; ஜாக்கிரதை!" என்று பூங்குழலி தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்துக்காட்டினாள்.

"பாவிப் பெண்ணே! எதற்காக என்னைக் குத்திக் கொல்ல வருகிறாய்? இளவரசரிடம் உன்னைப் பற்றி ஞாபகப்படுத்தினேனே, அதற்காகவா?"

"நீ பொய் சொல்லுகிறாய்; அவரிடம் என்னைப் பற்றி நீ ஒன்றுமே சொல்லவில்லை!"

"போனால் போகட்டும்; இளவரசரைப் பிடித்துக் கொண்டு போக இரண்டு கப்பல்கள் வந்திருப்பதாகச் சொன்னாய் அல்லவா? அதை அவரிடம் வந்து சொல்லிவிட்டு அப்புறம் எப்படியாவது தொலைந்து போ!"

"எல்லா விவரங்களும் சேநாதிபதியிடம் சொல்லி விட்டேன்."

"இளவரசர் உன்னிடம் நேரில் கேட்டு அறிய விரும்புகிறார்."

"அவர் முன்னால் வந்தால் நான் ஊமையாகிவிடுவேன்."

"ஊமைச்சிகளிடத்தில் இளவரசருக்கு ரொம்பப் பிரியம்!"

"சீச்சீ! நீ பரிகாசம் செய்கிறாய்!" என்று சொல்லிப் பூங்குழலி கத்தியை ஓங்கினாள்.

"அப்படியானால் நீ என்னுடன் வரப் போவதில்லையா?"

"இல்லை!"

"சரி; நான் போகிறேன்!" என்று கூறிவிட்டு வந்தியத்தேவன் இரண்டு அடி எடுத்து வைத்தான். மறுபடியும் சட்டென்று திரும்பிப் பூங்குழலியின் கையிலிருந்து அவளுடைய கத்தியைப் பிடுங்கி வீசி எறிந்தான்!



சி எறிந்த கத்தி வெகுதூரம் சுழன்று சுழன்று சென்று ஓர் அடர்ந்த புதரில் விழுந்தது. கத்தி விழுந்த இடத்திலிருந்து 'வீல்' என்று ஒரு குரல் கேட்டது.

அது மனிதக் குரலா, ஏதேனும் ஒரு விலங்கு அல்லது பட்சியின் குரலா என்று தெரிந்து கொள்ள முடியவில்லை.

கத்தியைப் பிடுங்கியதும் வந்தியத்தேவனைக் கடுங்கோபத்துடன் பார்த்த பூங்குழலி மேற்கூறிய சத்தத்தைக் கேட்டதும் கத்தி விழுந்த இடத்தை ஆர்வத்துடன் நோக்கினாள். பிறகு, இருவரும் வியப்புடன் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

மெள்ள மெள்ள நடந்து கத்தி விழுந்த இடத்துக்கருகிலிருந்த புதரை நெருங்கிப் பார்த்தார்கள்.

செடிகளிலும் தரையிலும் புது இரத்தம் சிந்தியிருந்தது.

மற்றபடி அங்கு மனிதரும் இல்லை; விலங்கும் இல்லை. பூங்குழலியின் கத்தியையும் காணவில்லை!

"பார்த்தாயா? பூங்குழலி! நான் கூறியதன் உண்மை இப்போதாவது தெரிகிறதா? இளவரசரை நாலா பக்கமும் அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன. எந்த நேரத்தில் எந்த இடத்திலிருந்து எப்படிப்பட்ட அபாயம் வருமென்று சொல்ல முடியாது. தற்செயலாக உன்னுடைய கத்தியைப் பிடுங்கி நான் விட்டெறிந்தேன். அதிலிருந்து இங்கே யாரோ பதுங்கிக் கொண்டிருந்தது தெரிய வந்தது. எதற்காகப் பதுங்கியிருக்க வேண்டும் என்று நீயே யோசித்துப் பார்! இளவரசரைச் சமயம் பார்த்துத் தீர்த்துக் கட்டுவதற்காகத்தான்! கோடிக்கரைக்கு நான் வந்ததற்கு முதல் நாள் இரண்டு பேரை உன் அண்ணன் படகேற்றி அழைத்துப் போனதாகவும் அவர்களைப் பற்றி உனக்குச் சந்தேகம் தோன்றியதாகவும் சொல்லவில்லையா? அதை ஞாபகப்படுத்திக் கொள்! இப்படிப்பட்ட சமயத்தில் இளவரசரிடம் பிரியம் உள்ளவர்கள் அவரைவிட்டுப் போகலாமா?" என்று வந்தியத்தேவன் மூச்சு விடாமல் பேசி நிறுத்தினான்.

"அவர் என்னைப் போகச் சொன்னால் என்ன செய்வது?" என்று பூங்குழலி கேட்டாள்.

"அவர் போகச் சொன்னாலும் நாம் போகக் கூடாது!"

பூங்குழலி சற்று யோசித்துவிட்டு, "இங்கே பதுங்கியிருந்தது யார் என்று கண்டுபிடிக்க வேண்டாமா?" என்றாள்.

"அது நம்மால் முடியாத காரியம். இந்த அடர்ந்த காட்டில் எங்கேயென்று தேடிக் கண்டுபிடிப்பது? அதிக நேரம் தாமதித்தால் இளவரசருக்கு உண்மையாகக் கோபம் வந்துவிடும். நம்மை விட்டுவிட்டு எல்லாரும் போய் விடுவார்கள்! பேசாமல் என்னுடன் வா!"

"சரி வருகிறேன்!" என்று பூங்குழலி கூறினாள்.

இருவரும் மற்றவர்கள் இருந்த மண்டபத்தை நோக்கி நடந்தார்கள்.



ண்டபத்திலிருந்தவர்கள் வந்தியத்தேவனும் பூங்குழலியும் அருகில் வந்ததும் முதலில் மேற்படி சம்பவத்தைப் பற்றியே கேட்டார்கள். "எதற்காகக்

கத்தியை எறிந்தாய்? 'வீல்' என்ற சத்தம் கேட்டதே, அது என்ன சப்தம்?'' என்று வினவினார்கள்.

''புதரில் ஏதோ ஒரு மிருகம், சிறுத்தையோ அல்லது நரியோ, பதுங்கியிருந்ததுபோல் தோன்றியது. அதனால் இவளுடைய கத்தியைப் பிடுங்கி வீசி எறிந்தேன். கிட்டப் போய்ப் பார்த்தோம். ஒன்றும் இல்லை'' என்றான் வந்தியத்தேவன்.

''அது போனால் போகட்டும்; இந்தப் பெண்ணிடம் கேட்க வேண்டியதைக் கேளுங்கள்!'' என்றார் சேநாதிபதி.

பூங்குழலி வந்ததிலிருந்து இளவரசரையே பார்த்துக்கொண்டிருந்தாள். இளவரசர் அப்போது அவளை ஏறிட்டுப் பார்த்தார்.

*சீச்சீ!* இந்த நெஞ்சு எதற்காக இப்படி அடித்துக் கொள்கிறது? தொண்டையில் வந்து ஏதோ அடைக்கிறதே, அது என்ன? கண்ணில் எதற்காகக் கண்ணீர் ததும்புகிறது! அசட்டுப் பெண்ணே! உன் தைரியம் எல்லாம் எங்கே போயிற்று? அலை கடலையும் பெரும் புயலையும் கண்டு கலங்காத உன் உள்ளம் ஏன் இப்போது இப்படித் தத்தளிக்கிறது? கொடிய பயங்கர வேங்கைப் புலியின் கொள்ளிக் கண்களை ஏறிட்டுப் பார்க்கும் துணிவு படைத்த உன் கண்கள் ஏன் இப்போது மங்கல் அடைகிறது! பெண்ணே! மறுபடியும் பைத்தியக்காரி என்ற பட்டம் சூட்டிக் கொள்ளாதே! இளவரசரை நிமிர்ந்து பார்! அவர் கேட்கும் கேள்விகளுக்குக் கணீர் என்று மறுமொழி சொல்லு! உன்னை என்ன செய்து விடுவார்? அவர் கருணை மிகுந்தவர், தயாளு என்று உலகமெல்லாம் சொல்கிறதே! பேதைப் பெண்ணாகிய உன்னை இளவரசர் என்ன செய்து விடுவார்!......

'சமுத்திர குமாரி! என்னை உனக்கு நினைவிருக்கிறதா?' என்று அவர் கேட்டது ஆழ்கடலின் அடியிலிருந்து வரும் குரல் போல் அவள் காதில் தொனித்தது.

(தொடரும்)

## அருள்வாக்கு



ஏடு என்றால் நடுவிலே நரம்பும் அதற்கு இரண்டு பக்கம் இலையுமாக இருக்கிறதில் ஒரு பக்கம் என்று அர்த்தம். வாழையிலையை இப்படிக் குறுக்காகப் பிளந்து ஒவ்வொரு பாதியையும் ஏடு என்கிறோம். பனை மட்டையில் இருக்கிறதை இப்படியே நடுநரம்பை எடுத்து விட்டு ஒவ்வொரு பக்கத்தையும் உபயோகிப்பதுதான் ஏட்டுச் சுவடி. அது தான் நீண்ட நாளானாலும் பழுத்துப் போகாத, பழுதாகாத nature-ன் Paper (இயற்கையின் காகிதம்!) அதில் எழுத்தாணியை வைத்துக் கொண்டு செதுக்கி எழுத வேண்டும். ஞானசம்பந்தரின் தேவார ஏடு வைகையை எதிர்த்துக் கொண்டு கரையேறிய இடம் இன்றைக்கும் பாண்டிய நாட்டில் திருவேடகம் (திரு ஏடு அகம்) என்ற ஸ்தலமாக விளங்குகிறது. அங்கே ஈச்வரனுக்குப் 'பத்ரிகா பரமேச்வரர்' என்று பெயர். இப்போது 'பேப்பர்' என்றால் காகிதம் என்பது ஓர் அர்த்தம். மாகஸின் (ஸஞ்சிகை) என்றும் அர்த்தம். 'மாகஸின்' என்பதைப் 'பத்திரிகை' என்கிறோம். நேச்சரின் பேப்பரான இயற்கைப் பத்திரிகை கரையேறின ஊரில் ஸ்வாமியே 'பத்திரிகா பரமேச்வரன்' என்று ஜர்னலிஸ்ட் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்! 'பத்ரம்' 'பத்ரிக' என்றாலும் இலை என்றே அர்த்தம். இலையிலிருந்து வந்ததுதானே ஏடு? அதனால் ஏட்டுக்குப் பத்திரிகை என்று பெயர். இதுதான் அந்த நாள் காகிதமாக இருந்ததால் கடிதாசும் (லெட்டரும்) இதிலேதான் எழுதுவார்கள். அதனால் கடிதாசுக்குப் 'பத்ரம்' என்றே பேர் வந்து விட்டது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

இனிமேல் பொறுத்துக் கொள்ள முடியாது என்ற நிலைமையில்தான் கணேசன் அந்த முடிவுக்கு வந்தான். விருட்டென்று எழுந்து, சட்டையை மாட்டிக் கொண்டான். ஜன்னல் வழியாகப் பார்த்த போது அவள் வீட்டு வாசல் வெறிச்சோடி இருந்தது.

போகலாமா, வேண்டாமா என்று சின்னதாக ஒரு குழப்பம் குமிழியிட்டது. போய்த்தான் ஆக வேண்டும். இந்தத் தவிப்பின் நெருடல்களை இனியும் தாங்க முடியாது. ஏதேனும் ஒரு பதில் வந்தால் ஒழிய மனத்தின் அரிப்பு அடங்காது போலிருந்தது.

ஏற்கெனவே நான்கு நாட்களாகி விட்டன. அவளுடைய மௌனம், அதை விட அவள் இவனுடைய கண்ணிலேயே படாமல் போக்குக் காட்டிக் கொண்டு இருப்பது, எல்லாமுமாகச் சேர்ந்து வயிற்றில் புளியைக் கரைத்துக் கொண்டிருந்தது.

சத்தம் போடாமல் சித்தியிடம் வத்தி வைத்து விடுவாளோ! அவள் அப்படிப்பட்ட ரகம் இல்லை என்று மனம் சமாதானப்படுத்தினாலும், ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டோமோ என்று கணேசனுக்கு இலேசாகக் கை கால் நடுங்கின.

அப்படி ஏதாவது என்றால் சித்தி சும்மா இருக்க மாட்டாள். சின்ன விஷயத்தைக் கூட பிரும்மாண்டமாய்ப் பார்த்துப் பதறிப் போவது அவள் வழக்கம். அவள் 'ஆல் இண்டியா ரேடியோவாகி' இதை மாநிலச் செய்தியாக உறவுக்காரர் ஒருத்தர் விடாமல் ஒப்பித்து விடுவாள். அம்மாவுக்கும், அப்பாவுக்கும் தந்தியடித்தே வரவழைத்து விடுவாள். அப்பாவின் கொடுவாள் மீசையை நேருக்கு நேர் சந்திக்க இன்னும் கூடக் கணேசனுக்கு மெலிதான பயம் இருந்தது.

நல்ல வேளையாகச் சித்தி வீட்டில் இல்லை. பக்கத்து ஊருக்குப் போயிருக்கிறாள். அவள் வருவதற்குள் இருட்டு கட்டிவிடும்.

கணேசன் சப்தம் எழாமல் வாசல் கேட்டைச் சாத்தி விட்டுப் பக்கத்து காம்பவுண்ட்டிற்குள் நுழைந்தான். கதவுக்கு முன்னால் நின்றபடி சங்கடத்தோடு நெளிந்தான்.

எப்படி, என்ன சொல்லிக் கூப்பிடுவது என்று தெரியவில்லை. பெரிய வீட்டுப் பிள்ளை என்ற பந்தா, சத்தம் போட்டுக் கூப்பிட முடியாமல் அவன் குரல் வளையில் குந்திக் கொள்ள இரண்டொருமுறை தொண்டையைச் செருமினான்.

முழங்கால் தெரியச் சேலையைத் தூக்கி இடுப்பில் செருகிக் கொண்டு கொல்லைப் புறத்தில் வரட்டி தட்டிக் கொண்டிருந்த அவளுடைய தாயார் இவனைப் பார்த்ததும், வேகமாக ஓடி வந்தாள். சேலையைச் சரி செய்து கொண்டு, நனைந்த கையைத் துடைத்தபடி "வாங்க தம்பி" என்று முகம் நிறைந்த புன்னகையோடு வரவேற்றாள்.

என்ன சொல்வது என்று புரிபடாமல் தடுமாறிய கணேசன், "வந்து மல்லிகா... இல்லீங்களா" என்று இழுத்தான். அதற்குள் உள்ளே போய், பழைய நாற்காலியைத் தூக தட்டி எடுத்துப் போட்ட அந்த அம்மாள் "உள்ளே வந்து உட்காருங்க தம்பி" என்றாள் சுற்றிலும் பார்வையை இறைத்தபடி. வாசலில் நின்று மல்லிகாவின் பெயரைச் சத்தமாக உச்சரித்தது தப்போ என்ற குற்ற உணர்வோடு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான் கணேசன்.

"பொழுதே போக மாட்டேங்குது.. ஏதாவது கதைப் புத்தகம் இருந்தா மல்லிகா கிட்டே வாங்கிக்கிட்டுப் போகலாம்னு வந்தேன்"

அந்த அம்மாள் வெகு யதார்த்தமாகச் சிரித்தாள். சப்பென்று சோகம் ஒட்டிக் கொள்ள, பெரிதாக மூச்சு விட்டு உதட்டைப் பிதுக்கினாள்.

"பொஸ்தவம் படிக்க அவளுக்கு நேரம் ஏது தம்பி. நாலு நாளா ராட்டை சுத்தப் போறா. பொழுதோட வீட்டுக்கு வந்தா தையல்மிஷினே கதின்னு குந்திக்குவா. இடையில் டூசன் வேறே"

கணேசனுக்குப் பரிதாபமாய் இருந்தது. மேற் கொண்டு பேசுவதற்கு எதுவும் இல்லாமல் மெல்ல எழுவதற்கு யத்தனித்தான்.

"அட... உட்காருங்க தம்பி! வராதவங்க வந்திருக்கீங்க. ஒரு வாய் காப்பித் தண்ணியாவது குடிச்சுட்டுப் போங்க!"

அந்த அம்மாள் அடுக்களைக்குப் போனதும் கணேசன் அறையைச் சுற்றி நோட்டம் விட்டான். சுவரில், தோற்றம், மறைவு இத்யாதி விவரங்களுடன், வாடிய மாலையைச் சூடியபடி, கணக்கு வாத்தியார் கனகலிங்கத்தின் படம் புகை மண்டி, மங்கிப் போய்த் தொங்கிக் கொண்டிருந்தது. சற்றுத் தள்ளி... அட.. இதென்ன.. எட்டாம் வகுப்பு இறுதி யாண்டில் எடுத்துக் கொண்ட குரூப் போட்டோ!...

கணேசன் ஆர்வமாய் எழுந்து போய் போட்டோவை ஆராய்ந்தான். இடப்பக்க மூலையில் மல்லிகாவை நெருக்கமாய் உரசிக் கொண்டு நிற்கும் அந்த அரை டிராயர் பையன்...

ஓ! அது இவன்தான் என்பதை இப்போது உணரும் போது எவ்வளவு பூரிப்பாய் இருக்கிறது! இந்தப் போட்டோவை இவள் இத்தனை பத்திரமாக, பொறுப்புணர்ச்சியோடு,



மானேஜர்: "எதுக்குப்பா எனக்கு ஸ்வீட் தர்றே?"
பியூன்: "நேற்று நீங்க லீவிலிருந்தபோது ஆபீசில் நடந்த ரம்மியில் நூறு ரூபாய் ஜயித்தேன் ஸார்!"

— உ. ராஜாஜி.



"உங்க பத்திரிகையின் இலவச இணைப்பில் என்னோட கதை பிரசுரமாகி ஆறு மாசமாகுது. இன்னும் சன்மானம் தரலியே...?"

"அதுதான் இலவச இணைப்பாச்சே... அதுக்கு ஏன் சார் சன்மானம் கேக்குறீங்க...?"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

ஒரு பூஜைப் பொருளைப் போலப் போற்றிப் பாதுகாத்து வைத்திருக்கிறாளா?

"ஸ்கூல் ஞாபகத்தை அவள் இன்னும் மறக்கவே இல்லே. சதா இந்தப் போட்டோவைப் பார்த்துப் பழைய கதையையே பேசிக்கிட்டு இருப்பா"

நீட்டிய காப்பி டம்ளரைக் கணேசன் வாங்கிக் கொண்டான். மல்லிகாவின் தாயார் செல்லரித்துப் போன பழைய மர அலமாரியைக் குடைந்து பழுப்பேறிப் போன ஆட்டோகிராப் புத்தகத்தை எடுத்து இவனிடம் நீட்டினாள்.

"அடிக்கடி இதை எடுத்து வச்சுகிட்டுக் குழந்தை பெருமூச்சு விடுவா. இவங்க அப்பாரு மட்டும் இப்படி அல்பாயுசுல போகலேன்னா இவ தலையெழுத்து இப்படியா இருக்கும்!"

ஒரு பொக்கிஷம் போல இந்த ஆட்டோகிராப்பை மல்லிகா பூட்டி வைத்திருக்கிறாள் என்பதை நினைக்கும் போது கணேசனுக்குக் கண்ணீர் வந்துவிடும் போலிருந்தது.

அதில் ஆசிரியர்களுக்கு அடுத்தபடி மாணவர்களில் முதன் முதலாக இவன்தான் எழுதி, கையெழுத்திட்டிருந்தான்.

"மல்லிகைப் பூ உள்ளவரை மல்லிகாவை மறக்க முடியாது" என்று குண்டு குண்டான கையெழுத்தில் முத்துக் கோத்தாற்போல் எழுதி "அன்புடன் கணேசன்" என்று முடித்திருந்தான்.

அப்போதிருந்த அழகான கையெழுத்து இப்போது அதிகம் படித்த பிறகு கிறுக்கலாகிப் போனது போல அப்போதைய வாசகத்திலிருந்த கவிதை உணர்வு கூட இப்போது கையை உதறிக் கொண்டு விட்டது போல் தோன்றியது.

காலி டம்ளரை நீட்டி விட்டுச் சில நிமிடங்கள் அந்த அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கணேசன் விடை பெற்றுக் கொண்டான். அறைக்குத் திரும்பி, கட்டிலில் மல்லாக்கச் சாய்ந்த பின்பும் கூட மல்லிகா மனக் கண்ணிலிருந்து மறையவே இல்லை.

இளம் பிராயத்து நினைவுகள் இடைக் காலத்தில் கனவுகளாகிப் போனாலும், கல்வெட்டுக்களைப் போல இப்போதும் ஞாபகத்தில் நிற்கின்றனவே!

ராணுவ அதிகாரியாக அப்பா ஊர் சுற்ற, அம்மாவும் அவருடன் சுற்ற, கிராமத்திலிருந்த அவர்களின் ஸ்திர சொத்துக்களையும், ஒரே மகனை கணேசனையும் நிர்வகிக்கும் பொறுப்பைப் பாட்டியும், அவருக்குப் பிறகு சித்தப்பாவும் ஏற்றுக் கொண்டார்கள். எட்டாவது படிக்கும் வரை கணேசனுக்குக் கிராமமே உலகமாய் இருந்தது. கணக்கு வாத்தியாரின் மகள் மல்லிகா மட்டுமே அப்போது அவனுக்கு மிகவும் பிடித்த பள்ளித் தோழி, வகுப்புத் தோழி, விளையாட்டுத் தோழி எல்லாமே. ஒரு மைல் தள்ளி இருக்கும் நடுநிலைப் பள்ளிக்கு அவளுடன்தான் போவான்... வருவான்... படித்தது போக மற்ற நேரத்தில் வாத்தியார் வீடே கதி என்று கிடப்பான்.

மல்லிகாவுக்குப் பிறகு வாத்தியாருக்கு வரிசையாகக் குழந்தைகள் இருந்தாலும் இந்த அளவுக்கு வறுமை அப்போது வலை விரித்திருக்கவில்லை. இவன் எட்டாங் கிளாஸைத் தாண்டிய வேளையில் அப்பாவுக்குத் திடீரென்று இவன் படிப்பின் மீது அக்கறை ஏற்பட்டு, சென்னையில் ஹாஸ்டல் வசதியோடு கூடிய பெரிய பள்ளி ஒன்றில் இவனைச் சேர்த்து விடவே பிரிவு நிரந்தரமாயிற்று.

முதலில் இவனுக்குப் பொசுக்கென்றிருந்தாலும், பரபரப்பான டவுனும், வசதிகளும், வித்தியாசமான பழக்கங்களும் மெல்ல மெல்ல இவனை மாற்றி விட்டன. பிறகு இவன் கிராமத்தை மறந்தே போனான். சித்தப்பாவின் சாவிற்கோ, சித்தி மகளின் திருமணத்திற்கோ எதற்கும் இவன் வரவில்லை. படிப்பு, அதற்குப் பின் பிஸினஸ் என்று வாழ்க்கை யந்திரத்தனமாகிவிட, இடையில் இவன் திருமணப் பேச்சு எழுந்த போதுதான் கொஞ்சம் தீர்க்கமாக யோசிக்கத் தனிமை தேடினான். சித்தி வேறு கிராமத்திலிருந்து பொருத்தமான ஒரு ஜாதகத்தை அனுப்பித் தொலைக்க, தவிர்க்க முடியாமல் இங்கே வந்து சேர்ந்தான் கணேசன். அப்போதுதான் மீண்டும் மல்லிகா மனத்திலிருந்து மெல்ல எழுந்தாள்.

இங்கே வந்ததும் அவளைப் பற்றித்தான் முதலில் விசாரித்தான். சித்தி கணக்கு வாத்தியாரின் அகால மரணத்தையும், அதற்குப் பின் அந்தக் குடும்பம் கதியற்றுப் போய்க் கஞ்சிக்கே லாட்டரி அடிப்பதையும், மல்லிகாதான் தையல் மெஷினையும், டியூஷனையும் வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டுக் குடும்ப பாரம் சுமப்பதையும் கதை கதையாய்ச் சொன்னாள்.

[illegible] [illegible], [illegible] முகமும், [illegible] [illegible] சிறியதான சீட்டிப் பாவாடையும், சாயம் போன தாவணியுமாக வந்து நின்ற மல்லிகாவைப் பார்த்து, பரபரப்போடு கண்கள் மலர கணேசன்தான் தவித்துப் போனானே தவிர அவள் அலட்டிக்

புத்தாண்டு
பொங்கல்
வாழ்த்துக்கள்!

# நினைத்தாலே இனிக்கிறது '87!

## சென்ற ஆண்டில் சாதனைகள் பல புரிந்தது ஸ்ரீராம் குருப்!

**1988-ல் உங்கள் முழு ஆதரவுடன்
லட்சியப் பாதையில் துள்ளி நடைபோடுவோம்.**

இதோ சென்ற ஆண்டு சாதனைகள் :

- ஸ்ரீராம் குருப்பில் டெபாஸிட் செய்தவர்களின் எண்ணிக்கை 30,000க்கு மேல் அதிகரித்தது.
- டெபாஸிட் தொகை ஆண்டுக்கு 70% வரை அதிகரித்து வருகிறது.
- ஸ்ரீராம் குருப்பில் சிட்டு சந்தா சேர்ந்தவர்களின் எண்ணிக்கை 80,000க்கு மேல் உயர்ந்துள்ளது.
- 25% வரை பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் அளிப்பு.
- பம்பாய், புதுடெல்லி, கல்கத்தா, அஹமதாபாத், புனே, கோயம்புத்தூர், மதுரை, விசாகப்பட்டினம், திருச்சி, எர்ணாகுளம் ஆகிய நகரங்களில் எங்களின் புதிய கிளைகள் தொடங்கப்பட்டுள்ளன.
- ஸ்ரீராம் குருப் வெளியிட்ட பங்கு முதலீட்டில் மிகக் குறுகிய காலத்தில் அதிக அளவில் பங்குதாரர்கள் சேர்ந்துள்ளனர்.

ஸ்ரீராம் குருப் கம்பெனிகள் திறமைமிக்க தொழில் வல்லுனர்களால் நடத்தப்பட்டு, வாடிக்கையாளர்களின் நலம் ஒன்றையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. இதனால் 1988ம் ஆண்டிலும் உங்களது பேராதரவையும் நம்பிக்கையையும் மேன்மேலும் பெறப்போவது திண்ணம்.




**ஸ்ரீராம்**
**குருப் கம்பெனிகள்**

நிர்வாக அலுவலகம் : ஸ்ரீராம் ஹவுஸ்,
10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை 600 086.
போன் : 454805/432113 டெலக்ஸ் : 041-8676 SHRI IN.

**ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள்,
சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.**

இதர அலுவலகங்கள் : சென்னை • பம்பாய் • புதுடெல்லி • கல்கத்தா • அஹமதாபாத் • புனே • கோயம்புத்தூர் • மதுரை • திருச்சி • பெங்களூர் • மைசூர் • ஹுப்ளி • செகந்திராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • நெல்லூர் • எர்ணாகுளம்.

ADWAVE/SGC/3458 TAM



# தளபதி திடமதி

## பரிசு ரூ. 400!

வாசகர், வளர்மதி ஆசைத்தம்பிக்கு வாழ்த்துக்கள்! இந்த இதழில் அவர் எழுதிய ஒரு துணுக்கு இடம் பெறுவதுடன் பரிசு இரட்டிப்பாகி ரூ. 50/— சன்மானம் பெறுகிறார். முதல் தடவை உங்கள் துணுக்கு பிரசுரமானால் பரிசு ரூ. 25/—. ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்து வரும் பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் சன்மானம் இரட்டிப்பாகும். அதிகபட்சப் பரிசு ரூ. 400/—. உறை மீது மறக்காமல், "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும். அகில உலகப் பிரச்னைகள் முதல் உள்ளூர் நிகழ்ச்சிகள் வரை நமது ஆஸ்தான ஜோக்கர் 'கமெண்ட்' அடிப்பார். அவற்றுள் ஒன்றைத்தான் நீங்கள் கூப்பனில் எழுதி அனுப்ப வேண்டும்.

கூப்பன்:

கல்கி இதழ் 10.1.88 — முடிவு தேதி: 19.1.88.

தளபதி திடமதி: "..............................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

.....................................................

...................................................."

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

கொள்ளவே இல்லை.

"சௌக்கியமா?" என்று ஒற்றை வரியில் விசாரித்து விட்டு, சித்தியிடம் "தைக்கத் துணி இருக்கா?" என்று கேட்டாள்.

இரண்டு நாட்கள் என்று ப்ரோகிராம் போட்டுக் கொண்டு இங்கே வந்த கணேசன் நாட்களையும், இரவில் தூக்கத்தையும் தள்ளிப் போட்டான். இடையில் சித்தி குறித்திருந்த பெண்ணைப் பார்த்துவிட்டு வந்து முடிவு சொல்லாமல் மாடி அறையில் முடங்கிக் கிடந்தான்.

தினமும் சிரமப்பட்டு மல்லிகாவைச் சந்தித்துப் பழைய ஸ்நேகத்தைக் கொண்டு வரப் பிரயத்தனப் பட்டான். அவள் பிடி கொடுக்கவே இல்லை. சில நேரம் சிரித்து மழுப்பினாள். சில நேரம் சீறி விழுந்தாள். பல சமயங்களில் இவனைப் பார்ப்பதையே தவிர்த்தாள்.

பத்து நாட்களுக்குப் பிறகு தைரியம் வந்து ஒரு மாலை நேரத்தில் வரப்பில் அவளை வழி மறித்தான். "ஐ லவ் யூ மல்லிகா" என்று சொல்வதற்குள் முற்றுமாக வியர்த்துப் போனான். அவளுக்காக மெஜந்தா கலரில் பார்த்துப் பார்த்து எடுத்திருந்த விலையுயர்ந்த தாவணி பார்சலை "என் அன்பின் அடையாளம்" என்று முணுமுணுத்தபடி நீட்டினான்.

அவள் இத்தனைக்கும் அயராமல் பார்சலை வாங்கிக் கொண்டாள். பதில் சொல்லாமல் போய் விட்டாள். நான்கு நாட்களாகி விட்டன. எங்கே இதை விளம்பரப்படுத்தி விடுவாளோ என்ற உதறலில்தான் கணேசன் தவித்துக் கொண்டிருந்தான்.

[illegible]று மணி குமாருக்கு அறை வாசலில் நிழலாடவே நிமிர்ந்து பார்த்த கணேசன், கையில் துணிப்பையுடன் மல்லிகா நிற்கவும், சடாரென்று எழுந்து "வா... மல்லிகா" என்று தடுமாறினான். மல்லிகா முகத்தில் எந்தச் சலனமும் இல்லாமல் அவனைப் பார்த்தாள்.

"வீட்டுக்கு வந்திருந்தீங்களாம்... கதைப் புஸ்தகம் கேட்டு..."

கணேசன் பேசவில்லை.

"கதையைத் தேடறது புஸ்தகத்தோட நிறுத்திக்கிட்டா பரவாயில்லேன்னு சொல்லிட்டுப் போக வந்தேன்."

கெஞ்சும் குரலில் அவள் சொன்னதைக் கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்த கணேசன்... "மல்லிகா" ... என்று மென்று விழுங்கினான்.

"நீங்க அதிகம் படிச்சவர். யோசிக்கத் தெரிஞ்சவர். இதெல்லாம் நடக்கக் கூடியது இல்லேன்னு உங்களுக்கு நல்லாவே தெரியும். தெரிஞ்சும் நீங்க இப்படி நெருக்கிகிட்டே இருந்தா, ஒரு கட்டத்துல, ஆசா பாசத்துக்கு அடிமையாகிப் போற சாதாரணப் பெண்ணான எனக்கும் கூடச் சபலம் ஏற்பட்டுப் போக வாய்ப்பு இருக்கு. அப்படி மனசைக் கொடுத்த பின்னாடி ஏதாவது தோல்வின்னா அதை ஆண்களைப் போலச் சர்வ சாதார

ணமா பெண்களிஞல மறக்கவும் முடியாது. மாத்திக்கவும் முடியாது. அதனலதான் நிச்சயமா நடக்காதுன்னு தெரிஞ்ச ஒன்னு மேல் பிரியம் இருந்தாலும் அதைப் பிரேமையா வளர்த்துக்கப் பிரியப்படாம நான் விலகிப் போய்க்கிட்டே இருக்கேன். இதை விடப் பெரிசா எனக்கு நிறைய கடமைகள் இருக்கு.இல்லே, என் முடிவு தப்பானதுன்னு நீங்க உறுதியாச் சொல்லுங்க... நாளைக்கே நம்ம கல்யாணத்தை ஏதோ ஒரு கோவில்லே வச்சுக்கலாம்''

முகத்தில் அறைவது போல அவள் பேசி முடிக்கவும், கணேசன் வியர்வையில் நனேந்திருந்தான். லேசான படபடப்பில் மார்பின் இடப்புறம் இரைச்சல் போட்டது. அவள் சர்வ சாதாரணமாகச் சிரித்தாள்.

அவள் அனுபவ முதிர்ச்சியில் இத்தனை அறிவுபூர்வமாகப் பேசுகிருள் என்பதைக் கணேசனல் புரிந்து கொள்ள முடிந்தது. அவளைவிட அதிகம் படித்திருந்தும், அந்தஸ்தில் உயர்ந்திருந்தும் கூட, தான் பல அடிகள் கூனிக் குறுகி விட்டதைப் போல அவமானம் அவனைப் பிடுங்கித் தின்றது. அவன் பதில் சொல்ல எத்தனிப்பதற்குள் ''கணேசு'' என்று குரல் கொடுத்தபடி மூச்சு முட்டப் படியேறி வந்த சித்தி, மல்லிகாவைக் கண்டதும் முகம் மாறிக் கலவரம் தொனிக்க ''என்ன மல்லிகா... இந்தப் பக்கம்''... என்ருள் கரத்தில்லாமல்.

கணேசன் நடுங்கிப் போனுன். இந்த நேரத்தில் அவன் கொடுத்த தாவணியை மல்லிகா எடுத்து நீட்டி விடுவாளோ என்று பயந்தான். மல்லிகா கொஞ்சமும் பதற்றமின்றி ''ஒன்னுமில்லேம்மா... ஜன்னல் திரை தைக்கச் சொல்லி இவரு துணி குடுத்திருந்தாரு. அதைத்தான் குடுத்துட்டுப் போலாம்னு வந்தேன்'' என்றபடி பைக்குள்ளிருந்த தாவணியை எடுத்தாள்.

அவன் வாங்கிக் கொடுத்திருந்த தாவணி, அந்த அறையில் இருந்த இரண்டு ஜன்னல்களுக்கும் பொருந்தக் கூடிய அழகான திரைச் சீலைகளாக மாறி இருந்தது...

அதை வாங்கிப் பார்த்த சித்தி, குழப்பத்துடன் ''ஜன்னல் திரையா... இவ்வளவு உசந்த துணியிலியா? ஏண்டா, உனக்கென்ன பைத்தியமா?'' என்ருள். பிறகு மல்லிகாவைப் பார்த்து ''சரிம்மா... நீ கிளம்பு... இதைக் குடுக்க நீ படியேறி வரணுமா? வாசலிலிருந்து ஒரு குரல் கூப்பிட்டிருந்தா யாராவது வந்து வாங்கிக்கிட்டிருப்பாங்களே!'' என்றதும் மல்லிகா பட்டென்று கணேசனைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் ''போதுமா?'' என்பதுபோல இகழ்ச்சி எட்டிப் பார்த்தது.

அவள் விடுவிடுவென்று இறங்கிப் போவதையே பார்த்துக் கொண்டிருந்த கணேசனிடம் ''பொண்ணு வீட்டுக்கு என்னடா பதில் சொல்றது'' என்று சித்தி கேட்டதும், கலங்கிய கண்களை மறைக்க வேண்டி முகத்தைத் திருப்பிக் கொண்ட கணேசன் ''சம்மதம்னு சொல்லிடு சித்தி'' என்ற போது சுத்தமாய் அவன் குரல் உடைந்து போயிருந்தது.

# நிற்க நிழல் வேண்டும்

## 24

பிரபு காத்திருந்தான், ஆவலுடன்.

சீலியா மெள்ள நிமிர்ந்து அவனைத் தீர்க்கமாகப் பார்த்தாள். கரிய சாகரமாய் ஒளிர்ந்த அந்தக் கண்களின் ஆழத்தில் தான் புதைந்து போவது போல் அவனுக்குப் பிரமையேற்பட்டது. அவள் ஏதோ சொல்ல வாயைத் திறந்தாள். அவன் செவிகளைத் தீட்டிக் கொண்டு நின்றான்.

''ஹலோ யங்மேன்!'' என்றபடி விஜயபாலசூர்ய உள்ளே நுழைந்தார். ''எப்படி இருக்கிறீர்கள்? உங்களைப் பார்த்து மூன்று நான்கு நாட்கள் ஆகிவிட்டன!''

சீலியா மீண்டும் ஃபைலுக்கு முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பிரபு தன் ஏமாற்றத்தை விழுங்கிக்கொண்டு, புன்னகையுடன் திரும்பினான்.

''ரொம்பச் சுறுசுறுப்பாக இருக்கிறேன்! இங்கே விஷயத்துக்குப் பஞ்சமா என்ன?

''இட் இஸ் பேட்!'' என்று பாலசூர்ய சோகத்துடன் தலையை அசைத்தார். ''நான் பயந்த மாதிரியே நடக்க ஆரம்பித்திருக்கிறது. முட்டாள்கள்! முட்டாள்கள்! இவர்களுக்குப் பிரச்னைகள் இருந்து கொண்டே இருக்க வேண்டும். இங்கு சமாதானம் மிக அவசியமான தேவை என்று உணராதவர்கள். இந்த நான்கு வருஷ இனப்போராட்டத்தால் பொருளாதாரம் நசிந்து விட்டது. ராணுவச் செலவு அதிகரித்துப் போனதால் முன்னேற்றத் திட்டங்கள் எதற்கும் பணமில்லை — வெளிநாட்டிலிருந்து டூரிஸ்டுகள் வருவது நின்றே போய்விட்டது. இதற்கெல்லாம் விடிவு எப்போது என்று காத்திருக்கிறார்கள் ஜனங்கள்! இந்த முட்டாள்கள் தீர்வுக்கான முயற்சியையே நசுக்கப் பார்க்கிறார்கள்!

விஜயபாலசூர்ய உணர்ச்சிவசப்பட்டுப் போனதைக் கண்டு அவனுக்கு வியப்பேற்பட்டது. அவருடைய ஓர் உறுப்பைப் போல் இருக்கும் புன்னகையைக் கூடக் காணோம்.

''ஜயவர்த்தனவுக்குப் பலத்த அடியா?'' என்றான் அவன் மெல்ல.

''இல்லை. நல்லவேளை! அவரைக் குறி வைத்த வெடிதான் இது. ஏதேனும் ஆகியிருந்தால், சமாதானத்தைப் பற்றி மறந்திருக்க வேண்டியதுதான். இரண்டு மந்திரிகளைத் தவிர வேறு யாருடைய ஆதரவும் இந்த ஒப்பந்தத்துக்கு இல்லை. ஸிரிமாவோவின் எதிர்க்கட்சி ஆரம்பத்திலிருந்து இதை எதிர்த்து வந்திருக்கிறது. இந்த எதிர்ப்புச் சக்திகளின் பயமுறுத்தலினால் அரசே, ஒப்பந்தத்துக்குப் பிறகும், கிழக்குப் பகுதிகளில் தில்லுமுல்லு செய்து வருகிறது.''

''நீங்கள் கிழக்குப் பகுதிக்குப் போயிருந்தீர்கள் என்று கேள்விப்பட்டேனே!''

''ஆமாம், திரிகோணமலைக்கும் பத்திக்கோலாவுக்கும் போயிருந்தேன். லைப்ரரிக்குப் போகலாம் வாருங்கள்! சீலியா, தேநீருக்கு ஏற்பாடு செய்! நீயும் எங்களுடன் சேர்ந்து கொள்!''

தலையை மட்டும் அசைத்துச் சீலியா அகன்றதும் அவர் அவன் தோளை அணைத்தபடி லைப்ரரிக்கு நகர்ந்தார். இப்பொழுது இவரது பேச்சைக் கேட்கும் மனநிலை இல்லாவிட்டாலும் அவன் வேறு வழியில்லாமல், சீலியாவும் அவர்களுடனே இருப்பாள் என்கிற சமாதானத்துடன் கூட நடந்தான்.

லைப்ரரியில் அமர்ந்ததும், ''என்ன அது தில்லுமுல்லு?'' என்றான்.

''கிழக்குத் தமிழ்ப் பகுதிகளில் பல காலமாகச் சிங்களக் குடியேற்றம் அரசு செய்து வருகிறது. அதைத் தமிழர்கள் எதிர்த்து வருகிறார்கள். இப்பொழுது, ஒப்பந்தம் முடிந்த பிறகும் குடியேற்றம் நடக்கிறது.''

''பிறகு பொதுஜன வாக்கெடுப்பின் போது தமிழர்களுக்கு எதிராகப் போகாதோ அது?''

பாலசூர்ய சிரித்தார். ''போக வேண்டும் என்கிற நோக்கத்தினால்தானே இந்தக் காரியம்! மாயாவைக் கேட்டால் இதில் என்ன தவறு என்று கேட்பாள்! எங்கு வேண்டுமானாலும் குடியேற ஜனங்களுக்கு உரிமையில்லையா என்பாள்! நெருக்கடியான இடத்திலிருக்கும் மக்களை நெருக்கடி இல்லாத இடத்துக்கு மாற்றுவது பொருளாதாரக் காரணங்களுக்கு என்னும் அரசு. ஆனால் அது திட்டமிட்ட குடியேற்றம் என்று எல்லாருக்கும் தெரியும். வடக்கைப் போல் கிழக்குப் பகுதியில் தமிழர் நிலை பலமானது இல்லை. தமிழர்கள், முஸ்லிம் தமிழர்கள், சிங்களவர்கள் இருக்கும் பகுதி அது. முஸ்லிம்களுக்கும் தமிழர்களுக்கும் இடையே அத்தனை சுமுகமான உறவில்லை. முக்கியமாக அங்கே போராளிகளுக்கு ஆதரவில்லை. நிலைமையைப் பயன்படுத்தப் பார்க்கிறது அரசு. குடியேற்றம் உண்மையா என்று பார்க்கப் போயிருந்

வாஸந்தி

தேன்.''

''உண்மையா?'' என்றான் பிரபு சிலியா உள்ளே நுழைவதைக் கவனித்தபடி. சிலியா வுக்குப் பின்னால் வேலைக்காரன் தேநீர் டிரே யைக் கொண்டு வந்து வைத்தான்.

சிலியாவிடமிருந்து கோப்பையை வாங் கியபடி, ''உண்மைதான்'' என்றார் பால சூர்ய. "இந்த உடன்படிக்கையில் கூறப்படும் வடக்கு, கிழக்கு இணைப்பை எதிர்த்துத் தானே எதிர்க்கட்சிகள் இத்தனை அமர்க் களம் செய்து கொண்டிருக்கின்றன! இணைப்பு ஏற்படக் கூடிய நிலைமையைத் தவிர்க்க அரசு சாமர்த்தியமாகக் குடியேற் றத்தைச் செய்து கொண்டிருக்கிறது."

''இந்திய ஹைகமிஷனுக்கு இதைப் பற்றித் தெரிந்திருக்காதா? கண்டனம் தெரிவிக்கா மல் இருப்பார்களா?''

விஜயபாலசூர்ய யோசனையுடன் சிரித் தார்.

''இவர்கள் அதை மதிக்க வேண்டும். அச காய சூரர்கள் இவர்கள்! தோட்டத் தமிழர் களுக்குப் பிரஜா உரிமைப் பாதிக்கப்பட்ட தற்கு ஒரு முக்கிய காரணம் என்ன தெரி யுமா? சுதந்திரத்துக்குப் பின் நடந்த தேர்த லில் கண்டிப் பகுதியிலிருந்து ஜயித்தவர்கள் அநேகமாகத் தோட்ட வேலைக்கு வந்த இந்தி யர்கள். கண்டி, காலம் காலமாய்ச் சிங்களக் கலாசாரத்தின் தூய்மை கெடாமல் காப் பாற்றி வந்த தொகுதி என்று பெருமை கொண்டது. ஒரேயடியாய் அங்கே அந்நியத் தமிழர்கள் வென்று பாராளுமன்றத்துக்குச் சென்றுவிட்டது சிங்களவரை உலுக்கி விட்டது! இதற்கு என்ன வழி? பிடுங்கு, பிரஜா உரிமையை!'' பாலசூர்ய மீண்டும் சிரித்தார்.

"நிலைமையைச் சமாளிக்க, அதையே மல்டி மெம்பர் எலக்டரேட்டாக மாற்றுவோம் என்று அவர்கள் நினைக்கவில்லை! இனவெறி என்பது மனத்தை எப்படிக் குறுக்கிவிடுகிறது பாருங்கள்!''

இவர் தமது பேச்சை எப்பொழுது முடிக்கப் போகிறார் என்று அவன் தவித் தான். அவனை விட அதிகத் தவிப்புடன் சிலியா உட்கார்ந்திருப்பதாகக் கற்பித்துக் கொண்டான். அவனது எண்ண ஓட்டத் தைப் புரிந்து கொண்ட மாதிரி விஜய பாலசூர்ய எழுந்தார். வெகு சந்தோஷமான விஷயத்தைப் பற்றி இத்தனை நேரம் பேசியது போல் முகப் பிரஸன்னத்துடன் சொன் னார்.

''மறுபடியும் சந்திப்போம். உங்களுக்கும் வேலையிருக்கும்.''

அவன் தன் அறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டான். ஐந்தே நிமிஷம்.

கதவு தட்டப்பட்டது. 'வா வழிக்கு' என்று தனக்குள் சொல்லியபடி அவன் கதவைத் திறந்து வெளியில் நின்றவளை எதிர்பார்க் காததுபோல் புருவத்தை உயர்த்தினான்.

''உள்ளே வரலாமா?'' என்றாள் சிலியா தமிழில்.

அவன் லேசாகச் சிரித்துக் கதவை நன்றாகத் திறந்தான்.

''வாங்க! உங்களைத் தமிழிலே பேச வைக்க இத்தனை நாட்கள் ஆச்சு!''

அவள் முகத்தில் வழக்கமான அலட்சியமும் தொலைவும் இல்லை. லேசான பதற்றம் தெரிந்தது.

''வெளியே போய்க் கதைக்க லாமா?'' என்றாள்.

''ஓ, யெஸ்!'' என்றான் அவன் உற்சாகத்துடன்.

ஞாபகமாகக் காமிராவை எடுத் துக் கொண்டு வழக்கம் போல் வெளிப்பக்கம் பூட்டி அவளுடன் தெருவில் கால் வைத்த போது பெரிசாக ஏதோ சாதித்து விட்ட திருப்தி யேற்பட்டது.

அவள் வேகமாக நடந்து கொண்டே "இங்கே பக்கத்திலே ஒரு பூங்கா இருக்கு. அங்கே போயிட லாம்'' என்றாள்.



"சரி" என்று நடந்தபடி அவன் கேட்டான்.

"உங்களுக்கு ஜயசீலன் என்கிறவரை தெரியுமா?"

சில விநாடி மௌனத்திற்குப் பிறகு அவள் மெள்ளச் சொன்னாள்:

"ஆமாம். பூங்காவுக்குப் போய்க் கதைக்கலாம்.

பூங்கா அருகிலேயே இருந்தது. யாருமே இல்லாமல் வெறிச்சென்றிருந்தது. ஓர் ஒதுக்குப் புறமான இடத்து மர நிழலில் அமர்ந்தார்கள்.

"சொல்லுங்கள். இப்ப ஜயசீலன் எங்கேயிருக்கார்?" என்றாள் அவள் உடனே.

"எனக்குத் தெரிஞ்சவரும் உங்களுக்குத் தெரிஞ்சவரும் ஒரே ஆள்னு எப்படி நினைக்கிறீங்க?"

"ஏனென்டா அந்தக் கவிதையைப் புனைந்தது என் சிநேகிதர் ஜயசீலன். தலைமறைவாக இருக்கும் நிலையிலே ரகசியமா எனக்கு டேப் செய்து அனுப்பினது. எங்கே சந்திச்சீங்க அவரை? எங்கே இருக்கார் இப்போ?"

அவள் மிகவும் உணர்ச்சிவசப் பட்டிருந்தாள். முகம் சிவந்திருந்தது. நெற்றியிலும் மேலுதட்டிலும் வியர்வை கட்டி நின்றிருந்தது. வார்த்தைகள் சீராக ஒலிக்காமல் துடிக்கும் உதடுகளிடையே தடுமாறி வந்தன.

"யாழ்ப்பாணத்திலே முதல்லே சந்திச்சேன். எனக்குத் தங்க இடமில்லேன்னு தெரிஞ்சு தன் வீட்டிலே தங்க அனுமதிச்சான்."

"எப்போ?"

"மே மாசம். அப்ப அங்கே நிலைமை ரொம்ப மோசம்."

"அப்ப ஜயசீலன் அங்கேயா இருந்தார்?"

"ஆமாம். உங்களைத் தேடிக்கிட்டு! உங்களை ராணுவம் கொண்டு போயிட்டதுன்னு நினைச்சு. ஒரு வேளை நீங்க திரும்பி வரலாம் என்கிற நம்பிக்கையோடு இருந்தான்."

சீலியாவின் தலை குனிந்திருந்தது. விழியோரத்தில் ஈரம் பளபளத்ததாக அவன் நினைத்துக் கொண்டான்.

"இப்பவும் யாழ்ப்பாணத்திலேதான் இருக்காரா?"

"இல்லே. ராமேச்வரம் மண்டபம் காம்பிலே இருக்கான்."

அவள் சடக்கென்று தலை நிமிர்ந்தாள்.

"அகதியாகவா?"

"ஆமாம். நீங்க ஒரு வேளை இந்தியா போயிருக்கலாம்னு உங்க அப்பாவும், அம்மாவும் அவனைக் கட்டாயப்படுத்தி போட்டுக்குப் பணத்தையும் கொடுத்து அனுப்பினாங்க. அவனும் நானும் சேர்ந்துதான் கிளம்பினோம். இலங்கை கடற்படை எங்க போட்டைத் தாக்க, நாங்கள் கரை சேர்றதே பெரிய பாடாய்ப் போச்சு. ஜயசீலன் மூணு நாள் நினைவில்லாம கிடந்தான். அப்பவும் உங்க பேருதான் வாயிலே...!"

கண்களை வேகமாகக் கொட்டி அவள் கண்ணீரை உள்ளுக்கிழுத்துக் கொண்டு மெல்லிய குரலில் கேட்டாள்.

"பிறகு?"

"அப்புறமென்ன? அகதிகளோடு மண்டபத்துக்குப் போய்ச் சேர்ந்தான். நீங்க அங்கே இருப்பீங்கன்னு திடமா நம்பினான். அங்கே நீங்க இல்லேன்னதும் அவனுடைய ஏமாற்றத்தை எப்படின்னு விளக்கறது? எனக்குத் தெரியல்லே. பிரியம் என்கிறது ஒரு உருவமற்ற வார்த்தைன்னு நான் நினைச்சிருந்தேன். ஆனால் உங்க மேல் அவனுக்கிருக்கிற பிரியத்தை நான் பிரத்யட்சமாகப் பார்த்தேன்."

அவள் மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள். உணர்ச்சிவசப்பட்டிருப்பது உதட்டின் துடிப்பில் தெரிந்தது.

"உங்கள் தம்பி ஜோஸப்பும் உங்க அத்தை மகள் புனிதாவும் அங்கேதான் இருக்காங்க. அவங்களோடதான் ஜயசீலன் தங்கியிருக்கான். அதாவது எனக்குத் தெரிஞ்சவரை."

அவள் தலையை நிமிர்த்தாமல், "என்னுடைய அப்பாவும், அம்மாவும்?" என்றாள்.

"அவங்க யாழ்ப்பாணத்திலேதான் இருக்கப் போறதாச் சொன்னாங்க. நீங்க திரும்பி வந்தா வீட்டுக்கு வருவீங்கன்னு; நீங்க உயிரோடு இருக்கீங்களோ இல்லையோன்னு அவங்க பயந்துட்டிருக்காங்க!"

அவள் முழங்கால்களுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அழுகிறாள் என்று அவன் புரிந்து கொண்டான். சத்தமில்லாத முதுகு குலுங்காத அழுகை.

"நீங்க ஏன் அவங்களுக்குத் தகவல் ஏதும் தெரிவிக்கல்லே சீலியா?"

முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டு அவள் நிமிர்ந்தாள்.

"தெரிவிக்க முடியல்லே" என்றாள் தொலைவைப் பார்த்தபடி. "யாழ்ப்பாணத்துக்கும், கொழும்புக்கும் தொடர்பு விட்டுப் போய்க் கன காலம் ஆச்சு. ரயில் இல்லே—டெலிபோன் இல்லே—தபாலும் இல்லே—இங்கேயும் நான் அநேகமா தலைமறைவாத்தான் இருக்கேன்."

"ஏன், ராணுவத்தைக் கண்டு பயமா?"

"இல்லே. ராணுவம் என்னைக் கொண்டு போகல்லே."

இந்த விஷயம் தனக்குத் தெரியும் என்று காண்பித்துக் கொள்ளாமல், "பின்னே?" என்றான் பிரபு.

"ஜயசீலனுக்குச் சுகுமாரன் என்கிற விரோதி ஒருத்தன். அவன்தான் ஆள் வெச்சுக் கடத்திக் கொண்டு போனான்."

"ஏன்?"

"ஜயசீலனைக் கொல்ல நினைச்சான். ஆனால் ஜயசீலன் தப்பித்துக் கொண்டு போயிட்டான். அவனைப் பழிவாங்க இதுதான் வழின்னு அவன் நினைச்சிருக்கலாம். அதோடு நான் ஒரு பெண் இயக்கத்திலே இருந்தேன். இந்தச் சுகுமாரனையும் அவனுடைய தலைவன் கருணாகரனையும் ரொம்பக் கண்டிச்சுப் பொதுக் கூட்டத்திலே பேசுவேன்."

''ஏன்?''

''மனுஷத்தனமே இல்லாத அவர்களுடைய பயங்கரவாதத்தை நான் வெறுத்தேன். நோக்கமே தெளிவில்லாத பயங்கரவாதக் கூட்டம் அது. எதேச்சாதிகாரம்தான் அதுக்குக் குறி— அதுவும் துப்பாக்கி முனையிலே! அதுக்குக் குறுக்கே யார் வந்தாலும் அந்தக் கூட்டமே ஒழிக்கும். இப்படிப்பட்ட ஒரு முட்டாள் கூட்டம் வளர்ந்தால் எம் பிரச்னைக்கு எந்த அரசியல் தீர்வும் வர முடியாது. அதை வளரவிடக் கூடாது என்று பொதுக் கூட்டத்திலே சொல்வேன்!''

அவளைப் பிரபு வியப்புடன் பார்த்தான்.

''ஜயசீலன் அந்தக் இயக்கத்திலே இருக்கான்னு தெரிஞ்சும்?''

''ஆமாம்''. என்றாள் அவள் அழுத்தமாக. ''அந்தக் கூட்டத்துலேந்து விலகி வந்துடும்படி ஜயசீலனண்டைப் பலமுறை சொன்னேன். அவராலே முடியல்லே. 'விலகினால் உயிர் போயிடும்'னு பயந்தார். கிழக்குப் பக்கம் போய்க் கண் மறைவாவே ஆயிட்டார். என்ன செய்யறதுன்னு எனக்குத் தெரியல்லே. ஜனங்களிடையேயாவது ஒரு பிரக்ஞையை ஏற்படுத்துவோம்னு பெண்கள் இயக்கத்திலே மும்முரமானேன். அப்பத்தான் சுகுமாரன் என்னைக் கடத்திக் கொண்டு போனது.''

''கொண்டு போய்...?''

அவள் சற்று நேரத்துக்குப் பேசவில்லை. தொலைவை ஒரு தீவிரத்துடன் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். கண்களில் குரோதமா, கோபமா, சோகமா என்று புரியாத ஒரு பாவம் இருந்தது.

அவனைச் சரேலென்று திரும்பிப் பார்த்து, அவள் கூச்சமில்லாமல் சொன்னாள்.

''அவன் என்ன செய்தான் என்கிறது சரித்திரமில்லே! தேக பலமும் திமிரும் கொண்ட எந்த மிருகமும் செய்யக் கூடியது தான். அவனிடமிருந்து நான் தப்பி வந்தேன் என்கிறதுதான் சரித்திரம்!''

''எப்படித் தப்பிச்சீங்க?'' என்றான் பிரபு வியப்புடன்.

சீலியா லேசாகச் சிரித்தாள். ''எனக்கே இன்னும் விளங்க இல்லே. நாங்க இருந்த இடத்தை ராணுவம் தாக்க வருகிறதாகத் தகவல் வந்தது. இரவோடு இரவாகத் தப்பி ஓட முயன்றோம். இருட்டிலே ஓடும்போது நான் வேறே திசையிலே புகுந்து வவுனியாவுக்கு எப்படியோ போய்ச் சேர்ந்தேன். அங்கே விஜயபாலசூர்ய வந்திருந்தார். பசியினாலேயும் களைப்பினாலேயும் நான் பாதையிலே மயங்கி விழுந்திருந்ததைப் பார்த்துப் பரிதாபப்பட்டு முதல் சிகிச்சை கொடுத்தார். என் கதையைக் கேட்டு, அங்கே இருக்கிறது ஆபத்து என்று கொழும்புக்கு அழைத்து வந்து விட்டார்.''

''இங்கேயும் உங்களை ஆபத்துத் தொடருது போலிருக்கே?'' என்றான் பிரபு.

அவள் கேள்விக் குறியுடன் அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

''அந்த ஆட்கள் ரெண்டு பேரும் க்ளோஸ் நான் காரண்டி தர்றேன்!'' என்று அவன் சிரித்தான். ''அன்னிக்கு நீங்க ஏன் பொய் சொன்னீங்க வெளியிலேயே போகல்லேன்னு? பாலசூர்ய வேறே ஒத்து ஊதினார்...?''

அவள் புன்னகையுடன் சொன்னாள். ''நான் இன்னும் எச்சரிக்கையோடுதான் இருக்கணும்.''

''இனிமேல் நீங்க எங்கிட்டேந்து எதையும் மறைக்கக் கூடாது!'' என்றான் பிரபு உரிமையோடு. ''மண்டபத்திலே அவன் இருக்கிற வீட்டு நம்பர் தெரியாது. இல்லேன்னா உடனடியா ஒரு லெட்டர் போட்டு நீங்க உயிரோடு இருக்கிறதையும் நான் கையும் களவுமா பிடிச்சதையும் தெரிவிச்சிருப்பேன்.''

அவள் சிரித்தாள். பிறகு தீவிரத்துடன் சொன்னாள்.

''ஜயசீலன் உயிரோடு இருக்கார் எண்டு நீங்க தெரிவிச்சதே எனக்குப் பெரிய விஷயம். சுகுமாரன் அவரை நிச்சயம் தீர்த்துக் கட்டியிருப்பான் எண்டுதான் நான் நினைச்சிருந்தேன். இனிமேல் பயமில்லே. சமாதானம் வந்திட்டது. இந்தியாவிலே இருந்து அகதிகள் திரும்ப ஆரம்பிச்சாச்சு. ஜயசீலன் யாழ்ப்பாணத்துக்கு நிச்சயம் வந்து விடுவார். இன்னும் ஒரு வாரத்திலே கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு யாழ் தேவி ரயில் போக்குவரத்து துவங்கப் போகிறது. நானும் கிளம்பிப் போய் விடுவேன். நாங்கள் இரண்டு பேரும் கஷ்டப்பட்டு உயிர் பிழைச்சதுக்குக் காரணம் இருக்கு மிஸ்டர் பிரபு!''

அவளுடைய முகத்தில் ஓர் அபூர்வமான பிரகாசம் தெரிந்தது. கண்கள் நட்சத்திரங்களாக ஒளிர்ந்தன.

'கடவுளே, இந்தப் பெண்ணுக்கு ஏமாற்றமளிக்காதே!' என்று அவன் அவசரமாகப் பிரார்த்தித்துக் கொண்டான்.

(தொடரும்)



### ஜால்ராக்கள் இல்லாத காலத்தில்...

பதினைலாவது லூயி மன்னர், தம் மந்திரிகளுடன் ஒரு பிரச்னையை விவாதித்துக் கொண்டிருந்தார். கிரமான்ட் என்ற ராஜதந்திரி அப்போது உள்ளே வந்தார். மன்னர் அவரை வரவேற்று, ''என் கருத்து சரியா தப்பா என்று நீங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றார்.

''உங்கள் கட்சி தப்பு'' என்றார் கிரமான்ட்.

மன்னர் ஆச்சரியப்பட்டு, ''நான் இன்னும் என்ன விஷயமென்றே சொல்லவில்லையே? அதற்குள் எப்படி என் கருத்து தப்பு என்கிறீர்கள்?'' என்றார்.

கிரமான்ட் கூறினார்: ''உங்கள் வாதம் சரியானதாயிருந்தால் இந்த மந்திரிகள் இப்படி மவுனமாக இருக்க மாட்டார்கள்; ஆரவாரத்துடன் ஆதரித்துக் கொண்டிருப்பார்களே!'' என்றார்.

— ஏ. கே. நாசர்.

மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு !

யங்
ஸென்ஸேஷன்ஸ்
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

# ம:ஃபத்லால்

—நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




ம:.பத்லால் இண்டஸ்ட்ரீஸ் லிட். (நியூ ஷொர்ராக் மில்ஸ்) மற்றும் ம:.பத்லால் :.பைன் ஸ்பின்னிங் & மேனு:.பேக்சரிங் கம். லிமிடெடின் ரெஜிஸ்டெர்டு ட்ரேட் மார்க்.

Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

# அரிதாரம்

* இட ஒதுக்கீடு சம்பந்தமாகப் பேச்சு வார்த்தை நடத்த முதல்வர் அழைப்பு விடுத்ததும், ஓரளவு வசதிகள் படைத்த இதர சமூகத்தினர் நான், நீ எனப் போட்டி போட்டுக் கொண்டு ஆலாய்ப் பறந்து, பேராசையின் மொத்த உருவத்தைச் சமர்ப்பித்திருக்கிற சூழ்நிலையில் தண்டபாணி—லாலம்மா தம்பதிகள் தங்கள் சமூகத்திற்குரிய நியாயமான அடிப்படைத் தேவைகளை மட்டும் நிறைவேற்றக் கூறி விடுத்திருக்கும் வேண்டுகோளைப் பற்றி அறியும் போது இவர்களின் எளிமையுடன் கூடிய பெருந்தன்மையை நினைத்து வியந்து போய், கல்கி இவர்களை அட்டையில் போட்டுக் கௌரவித்திருப்பதை நினைத்து உள்ளம் மகிழ்ந்து போனேன்.

திருச்சி — 16. எஸ். ராஜகோபால்.



## பூசாத

* காகிதப் பூக்களுக்குக் கூடக் 'கவர்ச்சி' அவசியம் வேண்டும் என்று நினைக்கும் இக் காலத்தில் தோன்றும் 'அரிதாரம்' பூசிய அட்டைப்படங்களுக்கிடையே கல்கியின் நரிக்குறவத் தம்பதிகளின் அட்டைப்படம் வித்தியாசம்.

செங்குன்றம். அ. ஜமால் மொய்தீன்.

* "இட ஒதுக்கீடு பற்றி இவர்கள்" என்ற தலைப்பில் வெளியிட்டிருந்ததைப் பாராட்டி வரவேற்கிறோம். தமிழ்நாட்டிலே தாங்கள்தான் அதிக மக்கள் தொகை என்று ஒரு இனத்தவர் கூறிக் கொள்வது தவறான ஒன்றாகும். இது பற்றிய புள்ளி விவரங்கள் தெளிவாக இல்லை. ஒவ்வொரு ஜாதியின் உண்மையான மக்கள் தொகையைக் கணக்கெடுப்பு எடுத்தே ஆக வேண்டும். பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீடுகளைச் செய்யும் போது ஆண்டு வருமானம் 12 ஆயிரத்துக்குக் குறைவாக உள்ளவர்களுக்கு மட்டுமே முன்னுரிமை அளித்துச் சலுகைகள் வழங்கப்பட வேண்டும். வேலை வாய்ப்பு இதுவரை பெறாத குடும்பத்தினருக்கு முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்தால் தான் முன்னேறிய குடும்பங்களே திரும்பத் திரும்பச் சலுகைகளைப் பறித்துக் கொள்ளும் அபாயம் ஏற்படாதவாறு தவிர்க்கலாம்.

சென்னை—21. எம். வெங்கடசாமி, மாநிலத் தலைவர், தமிழ்நாடு முத்தரையர் சங்கம்.

* "பிடிவாதக்காரர் நா. பா" என்பதை நீங்கள் சொல்லித்தான் நாங்கள் தெரிந்து கொண்டோம்.

சுப்ரமணிய ராஜுவின் கடைசிச் சிறுகதை அருமை.

மேற்படி இரண்டு இனிய எழுத்தாளர்களுக்கும் "கல்கி" தெரிவித்த அஞ்சலியில் நானும் பங்கேற்கிறேன்.

பெங்களூர். ப. மூர்த்தி.

# வட்டமேஜை

* 83 ஆண்டுகள் வரை வாழ்ந்து 80 நூல்களை எழுதிப் புகழ்பெற்ற சாமிநாத சர்மா அவர்களைப் பற்றிய செய்தியை நீங்கள் வெளியிட்டிருந்தது அருமை! வேறு எந்த பத்திரிகையிலும் வராத அந்த அரிய தகவலை விளக்கிய 'கல்கி'க்கும் பாராட்டுக்கள்!

புத்தனாம்பட்டி. சி. மணி.

* இரண்டாலும் (வெற்றி, தோல்வி) பாதிக்கப் படாத மனமே சிந்தனையின் வினைநிலம்—தாரகவின் இப் பதிலை வெள்ளை அட்டையில் கொட்டை எழுத்துக்களில் எழுதி, என் அலுவலக அறையில் மாட்டி விட்டேன்!

சென்னை— 16. அர. மணிவண்ணன்.

* சுப்ரமணியராஜு அதிகமாக எழுதவில்லை என்று பாலகுமாரன் குறைப்பட்டிருக்கிறாரே. அது தான் சுப்ரமணியராஜுவின் பலமே எனலாம். அவர் ஒரே நேரத்தில் நிறைய எழுதாததால் தான் அவரின் படைப்புகளில் ஜீவன் இருக்கிறது!

பெங்களூர்— 25. கே. ஜி. எஃப். பழனிச்சாமி.

* தான், தனக்கு என்று வரும் போது மனித மனங்களில் எழும் 'சுயநலத்தை' விவரித்த தமயந்தியின் 'பயணம்' சிறுகதை, யதார்த்தத்துடன், வித்தியாசமாய் அமையப் பெற்றிருந்தது!

சென்னை —. 15. இரா. சி. இரஞ்சன்.

* மணநாளன்றே, மணவிழா முடிந்த முக்கால் மணி நேரத்திற்குள் சட்டமன்றப் பணிகளில் கலந்து கொண்ட பி. இராமமூர்த்தியின் கடமை உணர்வு நம்மைச் சிலிர்க்கச் செய்கிறது. அன்றைய சட்ட மன்றத்தையும், இன்றைய சட்ட மன்றத்தையும் ஒப்பிட்டால் மலையும், மடுவுமாக விளங்குகின்றன!

விழுப்புரம். எம். நடராஜன்.

# அட்டைப்படம்

* தலையங்கம் படித்தேன். ஒருதலைபட்சமாக நடக்கும் ஜனநாயக ஊழல் நாடகத்திற்குத் திரை மறைவில் கைகோத்து நிற்கும் விசாரணை கமிஷனை நன்றாகவே தாக்கி விட்டீர்கள்.

திருச்சி — 2. ஆற்காடு எழிலன்.

* "கல்வியால் நல்லது நடந்திருக்கு" — என்ற ஆவுடையாபுரம் மக்களின் வார்த்தை வெறும் புகழ்ச்சி அல்ல. தங்களின் இந்தத் தூய பணி தொடர்ந்து நடைபெற வாழ்த்துக்கள்... பாராட்டுக்கள்!

விருதுநகர். கே. டி. ஆர். சேகர்.

* ருஷ்யக் கலைஞர்களின் கலைத்திறனை கட்டுரையில் முதல் பத்து வரிகளுக்குள்ளேயே அடக்கி, நாங்கள் நிகழ்ச்சியை நேரில் கண்டது போல பிரமிக்க வைத்து விட்டீர்!

திருச்சி — 4. எஸ். எ. மெட்டில்டா.

* 'மாதம் ஒரு மாவட்டம்' பணியில் தாங்கள் எடுத்த முயற்சிகளை அடுத்து, மறைமலைநகர் பகுதியில் தற்போது சென்னை நகருக்கு ஈடாக 'ரேஷன்' பொருட்கள் வழங்கப்படுகின்றன என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

தா.மு. மக்காராம், தலைவர், மறைமலைநகர் நல்வாழ்வுச் சங்கம்.

(இக்கதை ரூ. 200 பரிசு பெறுகிறது.)

என்னைக் கண்டாலே பயந்து ஒதுங்கிப் போக ஆரம்பித்தார்கள் எனது நண்பர்கள். வேறு ஒன்றுமில்லை. ஆபீஸில் ஒரு நாள் என் சட்டையில் மூட்டைப் பூச்சி ஒன்று 'திரிவதை' என் நண்பன் கண்டுபிடித்து விட்டான்.

"ஏய், ஏய், நசுக்காதே. இன்னும் ஜாஸ்தியாய்ப் போய்டும்'' என்று ரொம்ப ஜாக்கிரதையாக விரல் நுனியில் பிடித்து மெதுவாய் நடந்து வெளியே வந்து, நல்ல வெயிலில் சிமெண்ட் தரையில் அதைப் போட்டு, அது துடித்து அடங்கியதைப் பார்த்துவிட்டு வந்தார்கள். "அடேங்கப்பா, இந்த சைஸ் மூட்டைப் பூச்சியை நான் பார்த்ததில்லைப்பா.''

அதன் பிறகுதான், "அப்பா, உனக்குக் கோடி கும்பிடு. நீ என்கிட்டே வராதே

# மருந்தோடு மந்திரம்!

யப்பா!'' என்று ஒட்டு மொத்தமாக என்னை விலக்கி வைத்தார்கள். அதில் — அந்த லிஸ்டில் — நான் ஆராதித்து, வருங்கால மனைவியாக்கலாமா என்று 'யோசித்து'க் கொண்டிருந்த கீதாவும் இருந்ததுதான் என் வருத்தத்துக்குக் காரணம்.

மானேஜர் வெளியே போன சமயம் எல்லோரும் அரட்டைக் கச்சேரியை நடத்திக் கொண்டிருந்தபோது எதேச்சையாக நான் அங்கு போனது தப்பாய்ப் போனது.

"அடுத்த ஜென்மத்துலே என்னவா பிறக்கணும்னு ஆசைப்படறே?'' என்று விஜயகுமார் கேட்டான்.

"கணேஷ் வீட்டு மூட்டைப் பூச்சியாகப் பிறக்கப் போறேன் — சாவே இல்லே!''

போஸ் இப்படிச் சொல்லவும் அறையே சிரிப்பால் கிடுகிடுத்தது. எனது உடல் முழுக்க எரிச்சல் பரவி அடங்கியது.

"கணேஷ் கொட்டாவி விட்டபோது பார்த்தேன். ரெண்டு மூட்டைப்பூச்சி வெளியே வந்ததுங்கிறேன்...'' என்றான் போஸ் தொடர்ந்து.

மீண்டும் சிரிப்பு! கீதாவும் கண்களில் நீரோடு, விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தாள். எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போனது — ஒரு முடிவுக்கு வந்தேன்.

"என்னப்பா இது பைத்தியக்காரத்தனம்?'' என்றார் சாஸ்திரி — எங்கள் மானேஜர்.

"மன்னிச்சுடுங்க சார், என்னாலே இந்த ஆபீஸிலே இருக்க முடியும்னு தோணலே.''

நான் சொல்லிக் கொண்டே போக, அவர் நான் கொடுத்த அந்தக் கடிதத்தின் மூலையில் இருந்து 'அதை'ப் பிடித்தார்.

— மூட்டைப்பூச்சி!

கடிதத்தைச் சுக்குநூறாக்கினார்.

"இதை அப்படியே வெளியே கொண்டு போட்டுடு'' என்று என் உள்ளங்கையில் மூட்டைப் பூச்சியைப் பத்திரப்படுத்திவிட்டு, "மூட்டைப் பூச்சிக்காக வேலையை ரிசைன் பண்றியா? நல்லா இருக்கு—டைப்ரைட்டர்லே ஏ. பி. சி. டி எங்கெங்கே இருக்குன்னு தெரிஞ்ச ஒரே ஆள் இந்த ஆபீஸிலே நீதான்! வேணும்னு ஒரு நாள் லீவு கொடுக்கிறேன். மூட்டைப் பூச்சியை ஒழிச்சுக் கட்டிப்புட்டு, வெற்றியோட திரும்பி வா!''

கொஞ்சம் விட்டிருந்தால் குங்குமம் எடுத்து நெற்றியில் வைத்திருப்பார் போல் தோன்றியது. ஒரு நாள் லீவு — லீவு அப்ளிகேஷனைப் பார்த்து ரொம்ப நாட்களாகி விட்டதால், லேசாக மனத்தின் ஓரத்தில் மகிழ்ச்சி முகிழ்த்தது.

அதிசயமாகக்கீதா என்னைக்காதலிப்பதாக ஒப்புக் கொண்டு விட்டாள். மனசு ரொம்பவே குதித்தது. லால்பாக்கில் யாரோ ஒரு ராஜா குதிரை மேல் சிலையாகியிருக்க, நாங்கள் கீழே சிலைகளாகியிருந்தோம். அவளது முக வசீகரத்தை ரொம்ப நேரம் ரசித்தவன் கேட்டேன் —

"நம்ம கல்யாணத்துக்கு உங்க அப்பா அம்மா ஒத்துக்குவாங்களா?''

"ஓ, கல்யாணம் பண்ணிக்கணுமில்லே'' என்று உணர்ந்து கவலைப்பட்டாள்.

மறுநாள் — ஆபீஸுக்கு வழக்கம் போல் தூங்கிக் கொண்டே போன போது, அவள் எதிர்ப்பட, விழித்தேன் —

"குட்நியூஸ், எங்க அப்பா அம்மா சம்மதிச்சுட்டாங்க!'' அவளை அப்படியே குண்டுக்

'கட்டாகத் தூக்கிச் சுற்ற ஆசை வர, ஆபீஸ் என்பது ஞாபகம் வந்து அடக்கிக் கொண்டேன்.

இதோ — இன்று முதலிரவு!

எப்படித்தான் நாட்கள் பறக்கின்றன? பால் கொண்டு வந்து கொடுத்து நாணிய வளை இறுக அணைத்து 'நாம் கொடுத்து வைத்தவர்கள்' என்றேன்.

அந்த அணைப்பின் இறுக்கம் அவளை மெலிதாகப் பதற வைக்க, அதை ரசித்தேன். 'இதோ' என்று குரல் கமற அழைத்து, விளக்கை அணைத்து, அவளது முதுகை வருடியபோது... கைகளில் 'குறுகுறு' என்றது.

இருட்டுக்குக் கண்களைப் பழக்கி உற்று நோக்க —

ஒன்று

இரண்டு

ஐந்து

பத்து

நூறு என

குபுகுபுவென்று பெருகி மூட்டைப் பூச்சிகள் வர —

திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தேன்.

நெஞ்சு தடக் தடக் கென்றது. டேபிள் லைட்டை எரிய விட்டேன். படுக்கையில் நாலா புறமும் மூட்டைப் பூச்சிகள் சிதறி ஓடிக் கொண்டிருக்க—

'கனவு தான்' என்று மனசு சொல்லி





ஹங்கேரியில் வாரத்துக்கு ஏழு நாட்களும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இருப்பதில்லை. வாரத்துக்கு ஒரு முறை ஆபீஸ் விடுமுறை என்பது போல ஹங்கேரியில் ஒவ்வொரு திங்கட்கிழமையும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளுக்கு விடுமுறை! மக்களுக்கு விடுதலை! .

கே. ஜி. எப். பழனிச்சாமி.

உடல் முழுக்கப் புல்லரிக்க வைக்க, நான் சொறிந்து கொண்டேன்.

என் கைகளைப் பார்த்த போது தூக்கி வாரிப் போட்டது. மாடர்ன் ஆர்ட் டிசைன் போல் ஆங்காங்கே தடித்து — ஒரு சுற்றுப் பருத்திருந்தேன். அம்மா பார்த்தால் சந்தோஷப்படுவாள்!

கடிகாரம் இரண்டு மணி காட்டிக் கொண்டிருந்தது. அருமையான தூக்கத்தைக் கெடுத்துக் கொண்ட எரிச்சல் — மூட்டைப் பூச்சிகள் உடம்பின் ஒவ்வொரு இஞ்ச்சிலும் பதித்த அன்பு முத்தங்களால் ஏற்பட்ட எரிச்சல் — எல்லாம் சேர்ந்து கொண்டது. அந்த இரவு நேரம் — என் பரிதாப நிலை — என் குரல் மட்டும் எடுப்பாக இருந்திருந்தால் 'எங்கே நிம்மதி' பாடியிருப்பேன்.

பரண் மீது இருந்த ஒரு காலி பாட்டிலை எடுத்து ஒவ்வொரு மூட்டைப் பூச்சியாய்ப் பிடித்து அதற்குள் போட்டேன். பெட்டிக்கு அடியில், புத்தகங்களுக்கிடையில், சன்னலில் தேடித் தேடிப் பிடித்தேன். கைகளுக்குத் தப்பிப் போன மூட்டைப் பூச்சி புத்தகத்துக்குள் ஒளிந்து கொள்ள, ஒவ்வொரு பக்கமாகத் தேடிக் கண்டுபிடித்துச் சிறை வைக்க — சின்னக் குழந்தை விளையாட்டு போல் இருந்தது. இன்றைக்கு எல்லா மூட்டைப் பூச்சிகளையும் பிடித்து விட வேண்டும்!

நேரங்கழித்து எழுந்து குளித்துவிட்டு, தலையைத் துவட்டிக் கொண்டிருந்த போது, 'பஸ்ஸர்' ஒலித்தது. கதவைத் திறந்த போது, 'பளார்' என ஆச்சரியம் கன்னத்தில் அறைந்தது. வேகவேகமாக வேட்டியைத் தழைய விட்டுக் கொண்டேன்.

"கீ...கீதா, நீங்களா?"

புன்னகையைத் தாராளமாக வழங்கி விட்டு உள்ளே நுழைந்தாள் கீதா.

"நீங்க ஆபீஸுக்குப் போகலையா?"

"காய்ச்சல்னு லீவு போட்டுட்டேன்"

# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் (பி) லிட்

நிர்வாக அலுவலகம் :-

39, நடேசன் தெரு (2-வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில்

தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494

## துவங்கும் புதிய சீட்டு குருப்புகள்

## (CENTRALIZED GROUPS)

| மாதங்கள் | உறுப்பினர்கள் | சந்தா தொகை | சீட்டு தொகை |
|---|---|---|---|
| 25 | 25 | 100 | 2,500 |
| 25 | 25 | 200 | 5,000 |
| 25 | 25 | 400 | 10,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 500 | 20,000 |
| 100 | 100 | 250 | 25,000 |
| 100 | 100 | 500 | 50,000 |

ஏல முறை :-

1. 100 மாத சீட்டுகள் உச்சவரம்பற்ற ஏலமாக (Unlimited Bidding) முடி முத்திரையிட்ட டெண்டர் மூலம் கோரலாம்.
2. 25/40 மாத சீட்டுகள்- "பாதுகாப்பு தொகையுடன்" கூடிய உச்சவரம்பற்ற ஏலமாக கோரலாம்.

விசேஷ சலுகை :-

1. புதிதாக சேரும் உறுப்பினர்களுக்கு 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.
2. புதிய உறுப்பினர்களை அறிமுகம் செய்வோருக்கும் 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.

விபரம் வேண்டுவோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :-

● சென்னை :- 39, நடேசன் தெரு, (2-வது மாடி) சிவா விஷ்ணு கோயில் அருகில், தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494 ● திருச்சி :- 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008, போன் : 31376/33397 ● கோயமுத்தூர் :- 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001, போன் :- 34369 ● மதுரை :- 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஷாப்பிங், மதுரை-625 001, போன் : 36004/34508 ● பாண்டிச்சேரி :- 11, செட்டி தெரு (கனரா வங்கி எதிரில்) 2-வது மாடி, பாண்டிச்சேரி-605 001, போன் : 26493/26471 ● திருநெல்வேலி 9-G, திலக் நகர், மதுரை ரோடு, திருநெல்வேலி-627 001, போன் : 25785 ● தஞ்சாவூர் :- எண் 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001, போன் : 21696/22286 ● பெங்களூர் :- 24/1-A, மார்கோஸா ரோடு, (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003, போன் :- 366971

● கும்பகோணம் :- 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001, போன் : 22647

● திருவண்ணாமலை :- 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601, போன் : 2483

● பட்டுக்கோட்டை :- 121/B, தம்பயாசி தெரு, பட்டுக்கோட்டை-614 601, போன் : 453 ● தூத்துக்குடி 10 & 11 விக்டோரியா சாலை, தூத்துக்குடி-628 001. ● வேலூர் :- 40, தெண்ணமரத் தெரு, வேலூர்-632 001

LOTUS



# அளவோடு அருந்தி வளமோடு வாழ்க!

த. தி.: 'குடி குடியைக் கெடுக்கும்'னு விளம்பரம் செய்யறது நம்ம கட்சிக் காரங்க பலரையே கிண்டல் செய் யறது மாதிரி இருக்குதுங்க...

அமைச்சர்: அதனாலை...?

த. தி.: 'அளவோடு அருந்தி வளமோடு வாழ்க'ன்னு பாட்டில்கள்ல அச்சிட உத்தரவு போடுங்க!

— வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை.

த. தி.: அடிக்கல் நாட்டு விழாவிலும் திறப்பு விழாவிலும் கலந்து கொள்ளத் தான் அமைச்சர்களுக்கு நேரம் சரியா யிருக்கு; வேலைகளை எங்கே கவனிக்கி றாங்கன்னு ஜனங்க பேசிக்கிறாங்க, தலைவரே!

அமைச்சர்: அடாடா! அதுக்கு என்ன செய்யலாம்?

த. தி.: அடிக்கல் நாட்டு விழா அமைச் சர்னு ஒருத்தரையும் திறப்பு விழா அமைச்சர்னு ஒருத்தரையும் நியமிச் சுட்டீங்கன்னா மத்தவங்க அவங்க வங்க வேலையைக் கவனிக்கலாமே!

— எஸ். சித்திக், என்மனம் கொண்டான்.



தலையைப் பக்கவாட்டில் சாய்த்து அவள் சொன்னது அழகாக இருந்தது.

"இதே தெருவிலே என் தோழி ஒருத்தி இருக்கா. அவளைப் பார்க்க வந்தேன். உங்க ளுக்குத் தெரிஞ்சிருக்குமே — இங்கிருந்து நாலாவது வீட்டில் லதான்னு"

"இல்லீங்க — நான் எந்தப் பெண்ணையும் அவ்வளவா இன்ட்ரஸ்ட் எடுத்துப் பார்க் கிறதில்லை"

அவள் கண்கள் நம்ப முடியாமல் ஆச்சரி யமாக என்னைப் பார்த்தன. பெண்களிடம் சில சமயம் பொய் சொல்லத்தான் வேண் டும்!

"எப்படி இருக்கு மூட்டைப் பூச்சி ஒழிப் பெல்லாம்?"

அந்தப் பாட்டிலை எடுத்துக் காட்டினேன்.

"சொன்னா நம்ப மாட்டீங்க — எழுபத்தி இரண்டு தேத்து பிடிச்சிருக்கேன். ஆனால் இன்னும் இருக்கு. கொஞ்சம் இருங்க — காப்பி கொண்டு வர்றேன்!"

"சே, அதெல்லாம் வேண்டாம் — விஸ் ரமம் எடுத்துக்காதீங்க!"

"அப்படி சொல்லிட்டா எப்படி? முத முதலா வலது கால் எடுத்து வைச்சு இந்த வீட்டுக்கு வந்திருக்கீங்க. காப்பி கூடக் கொடுக்காட்டி சரியில்லை!" என்று சமைய லறைக்குள் புகுந்தேன்.

டிகாக்ஷன் ரொம்ப குறைவாக இருந்தது. ஓரக் கண்ணால் வாசலைப் பார்த்தபடியே நைஸாகக் கொஞ்சம் வெந்நீரை அதில் கலந்தேன். சர்க்கரை தீர்ந்திருந்தது. பரண் மேலிருந்து எடுக்க வேண்டும். ஸ்டூல் மேல் ஏறி நின்று டப்பாவை எட்டி எடுத்த போது லாகவம் தப்பிவிட, தபதபவென்று பெரும் சத்தத்தை ஏற்படுத்திக் கொண்டு கீழே விழுந்தேன்.

அடடா" என்று ஓடி வந்தாள் கீதா. "ஐயையோ! ரத்தம்" என்று என் முழங் காலில் சிராய்த்திருப்பதைப் பார்த்து விட்டு.

யோசனையேதுமில்லாமல் உடனடியாக மேலாக்கை இடுப்பிலிருந்து இழுத்து, ஓரத்தை நொடியில் கிழித்துக் கட்டுப் போடப் போகிறாள் — என்றெல்லாம் என் எண்ணங் கள் ஓடிக் கொண்டிருக்க —

என் வேட்டி ஓரத்தில் கிழித்திருந்தது! கட்டு போட்டு விட்டுச் சமர்த்தாகப் புன் னகை செய்தாள்!




வேலையற்று இன்னலுறும் பட்டதாரிகள், பட்டத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று இனி கவலைப்படத் தேவையில்லை. வாங்கிய பட்டத்தைக் காற்றில் பறக்கவிட வசதியாக இலவச நூல் கண்டு வழங்கும் திட்டத்தை வரும் கல்வியாண்டில் எங்கள் அரசு அறிமுகப்படுத்தவிருக்கிறது!''

— வித்யா மணாளன், திருச்சி.



த. தி.: அமைச்சரவை இயங்கவில்லைன்னு குற்றச்சாட்டு நாளுக்கு நாள் வலுத்து வருது... அதை நீக்க நீங்கதான் ஏற்பாடு செய்யணும்...

தலைமைச் செயலாளர்: அதுக்கு நான் என்னங்க செய்ய முடியும்?

த. தி.: ஏன், எல்லா அமைச்சர்களுக்கும் சக்கரம் வைத்த சுழலும் நாற்காலி வாங்கிக் கொடுக்கலாமே!

— ப. அப்துல் அஜீஸ், நாகர்கோயில்.



தோழர்: அண்ணே! தெலுங்கு கங்கை சென்னைக்குள் நுழையறதைத் தமிழக அரசுதான் தாமதப்படுத்தறதா என். டி. ஆர். சொல்றாரே!

த. தி.: காரணம், நம்முடைய தமிழ்ப் பற்றுதான். அது மட்டும் தமிழ் கங்கையாயிருந்தால் இந்நேரம் இங்கே அது கொட்டோ கொட்டுன்னு கொட்டியிருக்காதா என்ன!

—பாலாஜி, சென்னை — 78.

**தஞ்சாவூர் வளர்மதி ஆசைத் தம்பிக்கு வாழ்த்துக்கள். இந்த இதழில் பிரசுரமாகும் அவருடைய துணுக்குக்குச் சன்மானம் இரட்டிப்பாகிறது! ரூ. 50 பரிசு பெறுகிறார்!**

---

நான் கொடுத்த காப்பியை ஒரு மடக்கு உறிஞ்சியவள், முகம் மாறி ''ஆ!'' என்றாள். தடாலென்று காப்பித் தம்ளரை நழுவ விட்டு, என் கையைப் பிடித்துக் கொண்டாள்.

''என்ன... என்ன ஆச்சு?''

''கா.. காலிலே பெருச்சாளி ஏறிப் போனது, பயந்துட்டேன்!''

''அது பெருச்சாளி இல்லேங்க—மூட்டைப் பூச்சி தான்!''

''வாட்?''

கின்னஸ் ரெக்கார்டைக் கேட்கும் தோரணையில் முகம் இருந்தது. என் கையை இன்னும் விடவில்லை. அந்த ஸ்பரிசம் ஒரு மாதிரி நீரூற்றை ஜிவ்வென்று என் இதயத்தில் பாய்ச்ச, இதயம் 'லவ் டவ்' என்றது. என் கையைப் பிடித்துக் கொண்டிருந்தது விநாடிகளுக்குப் பிறகே ஞாபகத்திற்கு வர, மெல்ல முகம் சிவந்து கையை எடுத்துக் கொண்டாள்.

''மருந்தேதும் அடிக்கலையா?''

''என்ன மருந்து அடிச்சாலும் பிரயோசனப்படலே. அதைக் குடிச்சிட்டு எல்லாம் பருத்துப் போயிட்டதுகள்!''

''நான் உங்களுக்கு உதவி பண்றேன். அந்த மருந்தைக் கொண்டு வாங்க!'' என்றவள் விளக்குமாற்றை எடுத்து பம்பரமாக அறையைச் சுத்தம் பண்ணத் தொடங்கினாள்.

நான் தடுத்துப் பார்த்தேன். விளக்குமாறைப் பிடுங்கப் பார்த்தேன்.

''ஏன் கணேஷ் என்னைத் தடுக்கறீங்க? நம்ம வீடுன்னு நான் நினைச்சுச் சுத்தம் செய்யறது உங்களுக்குப் பிடிக்கலையா?'' என்றாள்.

ஒரு மாதம் கழித்து —

''அது எப்படி கீதா, நான் எத்தனையோ தடவை மருந்தடிச்சும் போகாத மூட்டைப் பூச்சி ஒழிஞ்சு போனது? நீ மருந்தோட ஏதும் மந்திரம் கலந்து அடிச்சியா?''

எங்கள் படுக்கையறையில் அவள் மடியில் தலை வைத்துக் கேட்டேன்.

''அது ரகசியம்!''

''ப்ளீஸ், சொல்லேன்!''

கிட்டே நெருங்கி காதில் கிசுகிசுத்தாள்—

''நீங்க அன்றைக்குக் கொடுத்த காப்பியிலிருந்து ரெண்டு துளி எடுத்து மருந்தில் கலந்திருந்தேன்!''

புத்தாண்டு பிறந்து விட்டது. அவரவரும் புது டயரி வேட்டையில் இறங்கும் இத்தருணத்தில் ஸ்ரீபால் தமது பழைய டயரிகளைப் புரட்டிப் பார்க்கிறார்......

வட ஆற்காடு மாவட்டத்தில் ஓர் ஆசாமி, பகல் நேரத்திலேயே பல வீடுகளில் ஓட்டை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்து திருடுவான். அதுவும் முஸ்லீம் வீடுகளாகவே தேர்ந்தெடுத்துக் கொள்ளையடிப்பான். இதைக் கவனித்தபோது போலீஸில் பலர் அவன் முஸ்லிம் மதத்தினிடம் விரோத மனப்பான்மை கொண்டவனாக இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்து, அந்த அடிப்படையில் ஆராய்ந்து வந்தனர்.

ஆனால் ஒரே ஒரு போலீஸ் அதிகாரி இந்தக் கேஸை நுணுகி ஆராய்ந்ததில் இந்த எண்ணம் தவறானது என்ற முடிவுக்கு வந்தார். திருடனும் ஒரு முஸ்லிமாக, முஸ்லிம்களின் சம்பிரதாயங்களை நன்கு அறிந்தவனாக இருக்க வேண்டும் என்று அவர் எண்ணினார். அந்த அடிப்படையில் போலீஸ் ஆய்வைத் திசை திருப்பிய போது திருடன் விட்டுச் சென்ற ஒரு விரல் ரேகை அவனைக் காட்டிக் கொடுத்து விட்டது. போலீஸ் கை ரேகைப் பிரிவில் ஒப்பு நோக்கிய போது அவன் ஒரு பழம்பெரும் குற்றவாளி என்பது தெரிய வந்தது.

இவ்வாறு சமயோசித அறிவுடன் ஆய்வைத் திசை மாற்றி உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடிப்பதில் வெற்றி கண்டவர்—

தமிழக போலீஸ் துறையில் இன்று மிக





உயர்ந்த பதவி வகிக்கும் ஐ. ஜி. ஸ்ரீபால். அவருடைய இளமைக்கால அனுபவங்களில் மற்றொன்று இதைவிட ஆச்சர்யமானது. கோலாரைச் சேர்ந்த ஒரு போலீஸ்காரரே மக்களை மிரட்டியும் ஏமாற்றியும் பணம் பறித்து வருவதாகப் புகார்கள் வந்து கொண்டிருந்தன. ஆனால் ஸ்ரீபால் நன்கு விசாரித்தும் புலனாய்வு செய்தும் அப்படிப்பட்ட ஒரு போலீஸ்காரரைக் கூடத் தமது வட்டாரத்தில் காண முடியவில்லை. புகார் செய்தவர்களோ மிக நன்றாக அந்தப் போலீஸ்காரரை அடையாளம் கூறி வர்ணித்தார்கள். ஆனால் அத்தகைய ஒருவர் அந்த வட்டாரத்தில் பணியாற்றவில்லை. வேறு ஊரிலிருந்து வந்து சந்தை கூடும் போது மக்களிடையே சென்று மிரட்டியும் ஏமாற்றியும் அவன் பணம் பறிப்பதாகப் போலீஸ் முடிவுக்கு வந்து, இதர ஊர்களில் அவனை வலை போட்டுத் தேட ஆரம்பித்தது.

ஆனால் ஸ்ரீபாலுக்கு இதில் நம்பிக்கை பிறக்கவில்லை. ஏதோ நாடகம் நடப்பதாக எண்ணிய அவர், சந்தை கூடும் இடங்களில் மஃப்டியில் வளையவர ஆரம்பித்தார். ஒரு நாள் அந்தப் போலீஸ்காரன் தான் சந்தையில் தேட்டை போட்ட பொருள்கள், பணத்துடன் புறப்படும் போது வளைத்துப் பிடித்து விட்டார். அவர் எதிர்பார்த்தபடியே அவன் உள்ளூர் ஆசாமிதான்! அவர் ஊகித்தபடியே அவன் நாடகமாடிக் கொண்டும் இருந்தான்! அவன் போலீஸ்காரனே அல்ல!

# ஒரு போலீஸ்காரரின் டயரி

போலீஸ் உடையில் உலவி வந்து கொண்டிருந்தான், அவ்வளவே! போலீஸ் உடை எங்கிருந்து எப்படி கிடைத்தது என்று விசாரித்தபோது தன் தகப்பனார் ஒரு ஹெட் கான்ஸ்டபிள் என்பதை ஒப்புக் கொண்டான். ஸ்ரீபால் அந்தத் திருடனுக்குத் தண்டனை வாங்கிக் கொடுத்ததுடன் நில்லாது அந்த ஹெட் கான்ஸ்டபிளுக்கு ஆறுதல் கூறியும் தேற்றினார்!

இந்த அனுபவங்கள் எல்லாம் ஸ்ரீபாலுக்குச் சவாலாக விளங்கிய கேஸ்கள். அவருக்குச் சோதனையாக விளங்கியவை?

"எஸ்.பி.யாக சி.ஐ.டி. பிரிவில் பணியாற்றிய காலகட்டம்தான்" என்றார் ஸ்ரீபால். ஏனெனில் அப்போது வி.ஐ.பிக்களுக்குப் பாதுகாப்பு வழங்கும் பொறுப்பை அவர் ஏற்க வேண்டியிருந்தது. பெரிய பெரிய கூட்டங்கள், ஊர்வலங்கள் எல்லாம் நல்லபடியாக நடக்கும் வரை பாதுகாப்பு அளித்த போலீஸை யாரும் கண்டு கொள்ளவே மாட்டார்கள். ஆனால் வி. ஐ. பி.க்கு ஒரு சின்ன காயம் பட்டுவிட்டால் கூட அசம்பாவிதம் நடந்து விட்டது என்று போலீஸை எல்லாரும் சேர்ந்து வாங்கு வாங்கு என்று வாங்கி விடுவார்கள். இதை நன்கு உணர்ந்திருந்த ஸ்ரீபால் அந்தக் காலக் கட்டத்தில் இரவு பகல் பாராமல் உணவு உறக்கம் மறந்து பணியாற்றியிருக்கிறார்.

ஒரு முறை அப்போது பிரதமராக இருந்த இந்திரா காந்தி சென்னை வந்திருந்தார். பின்னோடு ராஜீவும் சோனியாவும் வந்திருந்தனர். பிரதமர் தமது நிகழ்ச்சி நிரலின்படி இங்குமங்கும் சென்று நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டிருந்த போது, சோனியாவும் ராஜீவும் பாம்புப் பண்ணையைப் பார்த்து விட்டுத் திரும்பினர். எல்லோரும் மீண்டும் மதிய உணவுக்கு ராஜ்பவனில் கூடிய போது ராஜீவ் தமது அனுபவத்தைத் தாயாரிடம் கூற, இந்திரா காந்தி தாமும் பாம்புப் பண்ணை பார்க்க விரும்பினார். "அடுத்த நிகழ்ச்சி எனக்கு நாலு மணிக்குத்தானே, அதற்கு முன் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்" என்று அவர் புறப்பட, பாதுகாப்பு அதிகாரிகள் பதறிப் போனார்கள். "நிகழ்ச்சி நிரலிலிருந்து மாறுபட்டு நீங்கள் திடீரென்று





சென்றால் எப்படி? பாதுகாப்பு ஏற்பாடுகள் ஏதும் செய்யப்பட்டிருக்காது. வேண்டாம்" என்றார்கள்.

பிரதமர் ஏமாற்றமடைந்தவராக, "எதற்கும் விசாரியுங்கள்" என்று கூற, அதிகாரிகள் ஸ்ரீபாலை அணுகிக் கேட்டனர். ஸ்ரீபால் சற்றும் தயங்காமல், "பிரதமர் பத்து நிமிஷத்தில் புறப்படலாம்" என்றார்.

அதன்படியே பிரதமர் கிளம்பிப் பாம்புப் பண்ணையைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பினார். தில்லியிலிருந்து வந்திருந்த பிரதமரின் பாதுகாப்பு அதிகாரிகள், "நிகழ்ச்சி நிரலில்



காதலன்: உங்கப்பா உனக்கு மாப்பிளை தேட ஆரம்பிச்சிருக்கார்னு சொல்றியே, நம்ம காதலைப்பத்தி சொல்றதுக்கென்ன?

காதலி: சொல்லலாம். ஆனா எங்கே உங்களையே கல்யாணம் பண்ணிக்கச் சொல்லிடுவாரோன்னுதான் பயமா இருக்குது!

— குடியாத்தம் மூ. மோகன்.

வாசகர்: "சென்ற இதழில் நிறையப் பக்கங்களில் சம்பந்தமில்லாமல் ஆறு மாதம் என்கிற வார்த்தை வருதே... ஏன்?"

ஆசிரியர்: "ஆறுமாத சம்பளப்பாக்கியைத் தராததால் கம்பாஸிட்டர் செய்த விஷமம் அது!"

—உ. ராஜாஜி.




மாற்றம் ஏற்பட்டது போலவே தோன்றவில்லையே? முன்கூட்டியே திட்டமிட்டது போலல்லவா எல்லாம் நடந்தது?" என்று ஆச்சர்யப்பட்டுப் போனார்கள். ஸ்ரீபாலை வாழ்த்தினார்கள்.

ஸ்ரீபால் இதை எப்படிச் சாதித்தார்? சோனியாவும், ராஜீவும் பாம்புப் பண்ணையை மிகவும் ரசித்ததாகத் தகவல் கிட்டியதுமே ஒரு வேளை பிரதமரும் போக விரும்பலாம் என்று எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டார். போவது என்றால் பிற்பகலில்தான் போக முடியும் என்பதையும் பிரதமரின் நிகழ்ச்சி நிரல் உணர்த்தியது. எனவே முன்னெச்சரிக்கையாக போலீஸ் டிரைவர்களுக்குச் சாப்பாடு தருவித்துத் தருவது முதல் சாலைகளில் போலீஸ் பாரா வரை சகல ஏற்பாடுகளையும் கவனித்துச் செய்து வைத்து விட்டார்!

இதற்கெல்லாம் பட்ட சிரமங்களுக்குச் சிறந்த பிரதிபலன் கிடைக்கத்தான் செய்தது. இந்திரா காந்தி பாம்புப் பண்ணையைப் பார்த்து ரசித்தாரே. அதுதான் அந்தப் பிரதிபலன்!

**கா**மராஜர் மறைந்தபோது சென்னைக்கு வந்த இந்திரா காந்தி மறுபடியும் ஒரு பாதுகாப்புப் பிரச்னையை ஏற்படுத்தினார். காமராஜரின் இறுதிச் சடங்கு நடக்கும் இடத்துக்கு இந்திரா காந்தி செல்ல ராஜ்பவனிலிருந்து ஒரு பாதை தனியே அவருக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால், அவரோ ஊர்வலத்தில் கூட்டத்தோடு கூட்டமாகத் தாமும் கலந்து கொண்டு முன்னணியில் இருக்க வேண்டும் என்றார்! மெய்க்காவலர்கள் ரொம்பவும் வாதாடியதன் பேரில் சற்று விட்டுக் கொடுத்த இந்திரா, "ஊர்வலத்தின் கடைசிக் கட்டத்திலாவது நான் நிச்சயம் கலந்து கொள்ள வேண்டும்" என்று பிடிவாதம் செய்தார். அந்த ஒரு கிலோ மீட்டர் தூரத்துக்குப் பொறுப்பேற்றுக் கொண்டார் ஸ்ரீபால். பாதுகாப்பைப் பலப்படுத்தினார். எந்தவித அசம்பாவிதமும் இன்றி எல்லாம் நடந்தேறியது. காமராஜருக்குச் சரியான முறையில் இறுதி அஞ்சலி செலுத்திய ஓர் ஆறுதல் இந்திரா காந்திக்குக் கிடைத்தது.

ஸ்ரீபால் சிறந்த சொற்பொழிவாளர் என்பதும் அவரது சொற்பொழிவுகள் நூல் வடிவம் கூடப் பெற்றுள்ளன என்பதும் பலருக்கும் தெரிந்திருக்கும். ஆனால் சொற்பொழிவாற்றும் ஆர்வம் அவருடைய பள்ளிப் பருவத்திலேயே ஆரம்பமாகிவிட்ட ஒன்று என்று பலருக்கும் தெரிந்திராது. ஏழாம் எட்டாம் வகுப்பில் படிக்கும் போதே பேச்சுப் போட்டிகளில் பங்கேற்பார். பின்னால் பல்கலைக்கழக அளவிலான ஒரு பேச்சுப் போட்டி முடியும்போது இரவு மணி ஒன்றேகால்! வீட்டிலே ஸ்ரீபாலைக் காணாமல் தவித்துப் போலீஸ் புகார் கொடுக்கலாமா என்று கூட யோசிக்க ஆரம்பித்து விட்டார்கள்! அந்தச் சமயம் பார்த்து, ஒரு கோப்பையுடன் அவர் திரும்பிவர, வீட்டில் அனைவருக்கும் இரட்டிப்பு மகிழ்ச்சி!

அன்று அவர் பேசியது "உலக சமாதானம்" என்ற தலைப்பில். எல்லோரையும் கவர்ந்து கரவொலி பெற்ற ஒரு வாசகம், "வெண் புறாக்கள் பறக்க வேண்டிய நீல வானில் வெடிகுண்டுகள் பறக்கின்றனவே" என்பது.

இதிலிருந்தே ஸ்ரீபால் போலீஸ் உடையில் இருந்தாலும் அவர் மனம் எங்கே இருக்கிறது என்பதை யாரும் உணரலாம். ரொம்பவும் தவிர்க்க முடியாத கட்டத்தில்தான் ஒரு போலீஸ் அதிகாரி துப்பாக்கிப் பிரயோகத்துக்கு உத்தரவிடலாம் என்ற கருத்துடையவர் அவர். இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி காட்டுத்தீயாகப் பரவிய கால கட்டத்தில் துப்பாக்கிச் சூட்டுக்கு உத்தரவிடாத நகரமாக விளங்கியது மதுரை! தடியடி, கண்ணீர்ப் புகைப் பிரயோகம் இவற்றிலேயே நிலைமையைச் சமாளித்தார் அன்றைய மதுரை நகர துணை போலீஸ் சூப்பரின்டென்டென்ட் ஸ்ரீபால்.

சென்ற ஆண்டு ஜனாதிபதி விருது பெற்ற ஸ்ரீபால் ஒவ்வொரு போலீஸ்காரருக்கும் எடுத்துக் கூறும் லட்சியக் கொள்கை: "பழக இனிமை; பணியில் நேர்மை; நமக்குப் பெருமை" என்பதுதான்.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி.

புத்தாண்டு
பொங்கல்
வாழ்த்துக்கள்



# கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

தனித்தன்மை வாய்ந்த வண்ணங்களுடன் வடிவங்களுடன் கூடிய பருத்தி, பாலியெஸ்டர் மற்றும் சிஃபான் சேலைகளை கோ-ஆப்டெக்ஸ் வழங்குகிறது.

100 சதவிகிதம் அசல் பட்டு மற்றும் தங்க சரிகைகளைக் கொண்டு நெசவு செய்யப்பட்ட புதுமையான பட்டுச்சேலைகளை இந்தப் பண்டிகைக்காலத்திற்கென கோ-ஆப்டெக்ஸ் அளிக்கிறது.

இந்தியாவின் மிகப்பெரிய கைத்தறி கூட்டுறவு விற்பனை நிறுவனம் கோ-ஆப்டெக்ஸ். அதற்குச் சொந்தமான 560 விற்பனைக்கூடங்கள் மூலமாக கோடிக்கணக்கான வாடிக்கையாளர்களின் தேவைகளை பூர்த்தி செய்கிறது




பண்டிகைக் கால அரசாங்க
சிறப்புத் தள்ளுபடி.




**ஹ**லோ மிஸ்டர்! உங்கள் காதைக் கொஞ்சம் கிட்டே கொண்டு வாருங்கள்; ஒரு ரகசியம் சொல்ல வேண்டும். வேறொன்றுமில்லை. என் மனைவி லாவண்யாவைச் சத்தமில்லாமல் மேலே அனுப்பப் போகிறேன்.

'காரணம் என்ன?' என்கிறீர்களா... சொல்கிறேன்...

என் பெயர் வினோத். நாலடி தொலைவிலிருந்து பார்த்தால் ஜாக்கி ஷ்ராஃப் மாதிரி தெரிவேன். பாங்க்கில் வேலை; கை நிறைய சம்பளம். இரண்டு வருடங்களுக்கு முன்னாலேயே ஆரம்பித்துவிட்ட கல்யாணப் பேச்சுக்களைத் தவிர்த்து வந்தவன், ஆறு மாதங்களுக்கு முன் லாவண்யாவுக்குத் தாலி கட்டிவிட்டேன்.

சுமார் நான்கு லட்சம் பெறுமானமான சொத்துக்களுடன் என் பின்னால் வந்துவிட்ட லாவண்யாவுக்குப் பிரதான காரியம் பத்திரிகைகளில் வருகிற சமையல் குறிப்புக்களை ஒன்றுவிடாமல் படித்து அதன்படி செய்து, 'எப்படிங்க இருக்கு; பிடிச்சிருக்கா உங்களுக்கு?' என்று கொண்டு வந்து நீட்டுவதுதான்!

வாழ்க்கையில் வேறென்ன வேண்டும் என்கிறீர்களா? போதாது நண்பரே! லாவண்யாவைப் பார்த்தால் உங்கள் முடிவை மாற்றிக் கொண்டு என் கட்சிக்குத் தாவி விடுவீர்கள். இருபத்தி இரண்டு வயது. மாநிறம். ஐம்பது சதவிகிதம் ஸ்ரீதேவி, முப்பது சதவிகிதம் மீனாட்சி சேஷாத்ரி. இருபது சதவிகிதம் மந்தாகினி என்றெல்லாம் நீங்கள் நினைத்தால்... ஸாரி நண்பரே! உங்கள் கணிப்பு தவறு. மரப்பாச்சிப் பொம்மை என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா, அதன் அசலான ஜெராக்ஸ் பிரதிதான் என் லாவண்யா. காப்பிக் கொட்டை நிறத்தில், உடலில் கிள்ளி எடுக்கச் சதை காணாமல் பட்டிக் காட்டில் வளர்ந்த ஒரு பெண்ணை வைத்துக் கொண்டு என்ன செய்வது சொல்லுங்கள்.

லாவண்யாவின் உறவுக்காரக் கிழம் ஒன்று என்ன செய்தது தெரியுமா? தனது அத்தனை லட்ச சொத்துக்களும் அவளுக்கே சேர வேண்டுமென்று உயில் எழுதிவிட்டு, கூடவே துணுக்கு மாதிரி ஒரு குறிப்பு. அவளது கணவனேயானாலும் அந்தச் சொத்துக்களை விற்கவோ, வேறு பெயருக்கு மாற்றவோ அதிகாரம் கிடையாது. அவளது


'அன்புடன்' ஒரு கொலை!
-விஜய நிலா-

> **கிழவி:** "என்னது! உங்க சோடாவின் டி.வி. விளம்பரத்துக்கு நான் போஸ் தரணுமா? என்னவென்று?"
>
> **அவர்:** "என் மருமகளுடன் அதிக நேரம் சண்டையிட எனக்குத் தெம்பு தருவது ஆமை மார்க் சோடாவேன்னு!"
>
> — உ. ராஜாஜி.

ஆயுட் காலம் வரையிலும் அது அவளுக்கு. அதன் பின் அவளது கணவனுக்கு என்று எழுதிவிட்டுப் போய் விட்டது கிழம். ஆகவே, சொத்தை என் பெயரில் மாற்றவோ விற்கவோ முடியாது— லாவண்யா மயானத்திற்கு உல்லாசப் பயணம் போனால் தவிர!

ஆகவே முடிவு செய்து விட்டேன் நண்பரே. இதற்கு இரண்டாவது காரணத்தைச் சொல்லவில்லையே! நதியாவின் சாயலில் இளமைத் துள்ளலுடன் எங்கள் பாங்கில் டைப்பிஸ்ட்டாக வந்த அனிதா வெகு சுலபத்தில் என்னை வீழ்த்தி விட்டாள். ஆகவே, அனிதாவும், லட்சங்களும் எனக்குக் கிடைக்க வேண்டுமானால் நான் செய்ய வேண்டிய 'காரியத்திற்கு' முகூர்த்தம் கூடக் குறித்து விட்டேன்.

**[illegible]**க்கியில் வந்து நின்ற என்னை ஒரு 'ஸ்கோப்' சைஸ் புன்னகையுடன் வரவேற்று, என் கையிலிருந்த வி.ஐ.பி.யை வாங்கிக் கொண்டு உள்ளே போனாள் லாவண்யா.

பின்னால் போய் எலும்பு துருத்துகிற கழுத்தைக் கட்டிக் கொண்டேன்.

"விடுங்க. என்னங்க இது. வந்ததும் வராததுமா....." எனது திடீர் அணைப்பிற்குக் காரணம் புரியாமல், பிரமிப்பாய் என் விழிகளைப் பார்த்துக் கொண்டே கேட்டாள்.

நான் மனத்திற்குள் சிரித்துக் கொண்டேன்.

"லாவண்யா! டியர்.. இதோ பார்த்தியா ட்ரெயின் டிக்கெட்.."

"எதுக்குங்க ரெண்டு டிக்கெட். ஊருக்குப் போறோமா.." என்றாள் ஆவலுடன்.

"ம்... அதுவும் எங்கே? ஊட்டிக்கு — என் தேவதையோட! கூபேயில நாம ரெண்டு பேர் மட்டும் ஜாலியா...! நமக்குக் கல்யாணமானப்ப கூட உடனே ஹனிமூன் போற சான்ஸ் வரல.. உங்க தாத்தா திடீர்னு மண்டையைப் போட்டதால..."

"இப்பவே போவணுமாங்க... இன்னும் கொஞ்ச நாள் போவட்டுமே..."

"இல்லடா.. இப்பத்தான் ஸீஸன் ஆரம்பிச்சிருக்கு. நீ ஊட்டி பார்த்திருக்கேயில்ல.."

"இல்லிங்க.. எல்லாம் சினிமால பார்த்ததுதான்.."

"கவலையை விடு. ஒவ்வொரு நிமிஷமும் உன்னைப் புல்தரையில் உருட்டி விளையாட நானுச்சு.." இழுத்து வேண்டா வெறுப்பாய் அணைத்தேன்.

"ச்சீய்.."

முகத்தைக் குச்சி விரல்களால் மூடிக் கொண்டு பாரதிராஜா படக் கதாநாயகி மாதிரி என்னை நாணப் பார்வை பார்த்தாள். 'என் வெல்வெட் தேவதை அனிதா எங்கே.. இவள் எங்கே.. ஊஹூம்ம்... பணத்துக்காக மரப்பாச்சியை எல்லாம் கொஞ்ச வேண்டியிருக்கிறது' என முனகிக் கொண்டது கேட்காமல் என்னை மேலும் காதல் பார்வையால் கவ்விக் கொண்டாள்.

**கூ**பேயினுள் —

முதலிரவு அறைக்குள் அவசரமாய்த் தள்ளப்பட்ட புதுமணப் பெண் மாதிரி நாணப் பார்வை பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தாள் லாவண்யா. பக்கத்தில் ஸ்நாக்ஸ், ஹாட் வாட்டர், ப்ளாஸ்க், ஸ்வெட்டர் என்று ஒரு கடையே பரப்பியிருந்தாள்.

"என்ன இதெல்லாம் லாவண்யா?"

"உங்களுக்குப் பிடிச்ச ஐட்டமெல்லாம் பண்ணி வைச்சிருக்கேன்— போற இடத்துல குளிர் உடம்புக்கு ஒத்துக்குமோ, என்னவோ அதான் அப்புறம் நீங்க போட்டுக்கறதுக்காக ஸ்வெட்டர்"

எனக்கு அவள் அறியாமையைக் கண்டு சிரிப்பு வந்தது.

"எனக்கு ஸ்வெட்டரெல்லாம் வேணும் லாவண்"

"ஏங்க?" புரியாமல் கேட்டாள்.

"எனக்கு ஸ்வெட்டர்தான் நீ இருக்கியே?" என்றதும்—

"ச்சீய்.." என்று நாணம் காட்டி என் மார்புப் பரப்பில் ஒண்டிக் கொண்டாள்.

ஸாரி, மனைவியே இதெல்லாம் இன்றோடு சரி. நாளை உனக்குக் கடைசி நாள்.

**ஊ**ட்டி போய்ச் சேர்ந்தவுடனேயே ஒரு ஹோட்டலில் டீலக்ஸ் டபுள் ரூம் எடுத்துக் கொண்டு உள்ளே போய் இளைப்பாறிய உடனேயே எனது 'கிரிமினல்' மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. மின்சார இணைப்புகளில் சில சில்மிஷங்கள் செய்ததும் 'ப்பட்டீ'ரென மின் இணைப்பு அறுபட்டது.

"என்னங்க என்ன சத்தம். திடீர்னு லைட் ஆஃப்பாயிடுச்சு" சோப்பு நுரை படர்ந்த முகத்துடன் குளியலறையிலிருந்து வெளிப்பட்டாள் லாவண்யா.

"என்ன ஆச்சுன்னு புரியலே. மேனேஜர் கிட்டச் சொல்றேன்."

போனேன். பத்திரிகையில் மூழ்கியிருந்த மேனேஜர் விவரமாய்க் கேட்டார்.

"எலெக்ட்ரீஷியனை வந்து பார்க்கச் சொல்றேன் ஸார்.. ஃப்யூஸ் போயிருக்கும். வயரிங் எல்லாம் சரி பண்ணணும்னு பார்த்தா எங்க ஸார் நேரம்.. நீங்க போங்க அனுப்பறேன்"

நன்றி சொல்லிவிட்டுத் திரும்பினேன். பின்னே நாளைக்கு நம்ம 'காரியத்திற்கு'ச் சாட்சி வேண்டாம்? ஏதேனும் விசாரணை நடந்தால், ஏற்கெனவே அறையில் மின்சாரக் கோளாறு இருக்கிறது என்று சொல்லலாமே!

ஆக, சாட்சி தயார் பண்ணியாகி விட்டது. இன்றே வேலையைத் துவங்கக் கூடாது. விட்டுப் பிடிக்க வேண்டும். நாளை காலையில் லாவண்யா வழக்கம் போல் 'லாலாலா' பாடிக் கொண்டே சந்தனச் சோப்புடன் குளிக்கிற போது ஸெட் அப் பண்ண வேண்டும்.

அன்று முழுவதும் லாவண்யாவை— என் சர்க்குச்சி மனைவியை,இழுத்துக் கொண்டு சுத்தினேன். திரும்பும் போது லேசாய் மழை பிடிக்கத் துவங்க எனது சால்வையை லாவண்யாவின் மேல் போர்த்தி விட்டு, அணைத்தாற்போல் நடந்தேன். எப்படியும் யாராவது பார்த்து வியந்திருப்பார்கள் 'பெண்டாட்டி மீது இத்தனை கரிசனமா' என்று,அந்த மேனேஜர் கூட எங்களை வியப்பாகப் பார்த்தார்.

அவரிடம் போனேன்.

''ஸார் ஒரு சின்ன உதவி.''

''சொல்லுங்க'' என்றார் தினப்பத்திரிகையிலிருந்து கண்களை உயர்த்தியபடியே.

''வர வழியில மழை பிடிச்சிடுச்சு ஸார்.. லாவண்யா சாதாரண ஜலதோஷம் பிடிச்சாலே தாங்க மாட்டா.. ஒரு விக்ஸ் வேபரப் பாட்டில் வேணும் ஸார். வர்ற வழியில் வாங்க முடியல... யாரையாவது அனுப்பி வாங்கி வரச் சொன்னீங்கன்னா...''

என்னை வினோதமாய்ப் பார்த்துக் கொண்டே மணியடித்துப் பையனை அழைத்தார்

''நீங்க ரூமுக்குப் போங்க ஸார். நான் அனுப்பறேன்''. புன்னகை செய்து நன்றி சொல்லிவிட்டு லாவண்யாவை அணைத்தவாறு அறைக்குள் வந்தேன். லாவண்யா பூரிப்புடன் என்னைப் பார்த்தாள். அன்று இரவு முழுவதும் என் மார்பருகே ஒண்டிக் கொண்டு முயல்குட்டி மாதிரி கிடந்தாள்.

என் திட்டத்தை மறுபடி மனத்துக்குள் ஒத்திகை பார்த்தேன். நாளை காலை லாவண்யா 'பாத்டப்'பில் குளிக்கும் போது மின்சாரம் பாய்ச்சி... வேண்டாம்! ஒரு வேளை கரண்ட் சரியாக 'பாஸ்' ஆகாமல் தப்பித்து விட்டால் முதலுக்கே மோசமாகிவிடும். ஆகவே குரூரமாய்ச் சிரித்தபடி லாவண்யாவைப் பார்த்தேன்.

அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். இதழ்கள் நாணச் சிரிப்பில் வழிய ஏதோ கனவு கண்டு கொண்டிருப்பது தெரிந்தது. டிஜிட்டலைப் பார்த்தேன்.

4. 50.

'ஸ்வீட் ட்ரீம்' என்று எழுதப்பட்டிருந்த தலையணை யை எடுத்தேன். நிதானமாய் லாவண்யாவை நெருங்கினேன். முகத்தில் முத்தமிட வைத்து அதே நிதானத்தோடு பலங்கொண்டமட்டும்அ..மு..த்..தி..னே..ன்.

சரியாய் மூன்று நிமிடம்... துவண்டாள்! குட்பை லாவண்யா!

தொப்பலாய் வியர்த்திருந்தேன். பரபரப்போடு ஃப்யூஸ் கேரியரிலிருந்து ஃப்யூஸைக் கழற்றி விட்டுக் கவனமாய்க் கையுறை



அணிந்து பாத்ரூம் சென்று, மறுபடி சில சித்து வேலைகள் பண்ணி விட்டு 'பாத்டப்'பில் வயர் அறுந்து தொங்குகிற மாதிரி வைத்தேன். பழையபடி இணைப்பு கொடுத்துச் சோதித்தேன்.

சுச்சிதம்!

லாவண்யாவைக் கொண்டு போய்க் கிடத்தலாமா? வேண்டாம். இன்னும் கொஞ்சம் நேரம் தாழ்த்தலாம். இல்லையேல் பின்னால் பி.எம். ரிப்போர்ட்டில் வம்பு வரும்.

5. 50.

ஃப்யூஸைப் பிடுங்கி மேஜை மீது வைத்தேன். கனக்கத் தொடங்கியிருந்த லாவண்யாவைக் கொண்டு போய் உடைகளைக் களைந்து பாத்டப்பில் கிடத்தினேன். மறுபடி ஃப்யூஸை பொருத்திவிட்டு ஹோட்டலிலிருந்து வெளியே போனேன்.

குறைந்தது இரண்டு மணி நேரம் வரையிலும் வெளியே சுற்றி விட்டு வந்து அதிர்ந்து, கூச்சலிட்டு அலறி, போலீஸை அழைத்து, அழுது அரற்றி நல்ல பெயர் வாங்கி, சொத்துக்கள் கை மாறும் வரை வாலைச் சுருட்டிக் கொண்டிருக்க வேண்டும். அப்புறம் அனிதாவிடம் சொர்க்கம் காண வேண்டும்.

ஊரைச் சுற்றி விட்டு எதுவுமே நிகழாதது போல ஹோட்டலுக்கு வந்தேன். ஃப்ரண்ட் ஆபீஸில் மேனேஜரைக் காணவில்லை. ரூப் தேரா மஸ்தானா பாடிய படியே அறைக்கு வந்தேன். அழுதேன். அரற்றினேன். கண்ணிமைக்கும் நேரத்தில் மானேஜர் வந்தார். கூட்டம் கூடியது. மானேஜர் அழைக்கப் போலீஸ் வந்தது.

''இன்ஸ்பெக்டர் இந்த ஆளுதான் பிடிங்க'' என்றார் மேனேஜர் என்னைச் சுட்டிக்காட்டி. திகைத்தேன்.

''இன்னிக்கு டிரான்ஸிஸ்டரில் அறிவிப்புகள் கேக்கலயா?'' என்றார் மானேஜர்.

''.....''

''இன்னிக்கு இந்த ஏரியாவுல அஞ்சு மணியிலேர்ந்து பத்தரை மணி வரைக்கும் கரெண்ட் சப்ளை இடையாது.''

''அங்க பாரு'' பார்த்தேன். 'ஜெனரேட்டர் ரிப்பேராகியுள்ளதால் மின்சாரம் தடைபடும் சமயங்களில் வாடிக்கையாளர்கள் ஒத்துழைக்கக் கோருகிறோம்' — சுவரில் அறிவிப்புப் பலகை. வேறு வழியின்றிக் கைகளை நீட்டினேன், விலங்குக்காக.



தியாகம் என்று குழைத்துக் குழைத்துக் கண்ணீருக்காகவே நடிக்கிறார். ஸ்கூல் கேட்டுக்கு அந்தண்டை நின்று, பிரேயர் முடிந்து வகுப்புக்களுக்கு நகரும் குழந்தைகளைப் பார்வையாலேயே கொஞ்சுகிறாரே, அடடா, குழந்தை ஏக்கத்தை இதைவிடச் சிறப்பாகக் காட்டிவிட முடியாது. தான் செய்து வைத்த கல்யாணத்தில் இஷ்டமில்லாத புருஷன், இரண்டாவது மனைவி (ஜெயஸ்ரீ)யை ஆரம்பத்தில் உதாசீனம் செய்யும் போது, அவருக்காகப் பரிந்து பரிந்து பேசுகிறாரே, பெண் மனத்தின் மிருதுத் தன்மையைப் பிட்டுப் பிட்டு வைக்கிறார். ஓவர் ஆக்ட் செய்து தொந்தரவு பண்ணும் இடங்களை வரிசைப்படுத்தாமல் விட்டு விடுவோம்.

கதையை, அதன் லாஜிக்கை, கழுதைமேல் ஏற்றியிருக்கிறார்கள். கன்னுபின்னுவென்று எட்டி உதைக்கிறது. சாம்பிளுக்கு இரண்டு:

என்னதான் பெண்டாட்டி ஆசைப்பட்டாலும் கூட, இரண்டாவது கல்யாணத்திற்கு இஷ்டமில்லாமல் சம்மதித்தாலும் கூட, மணமகளைப் பார்க்காமல், தாலி கட்டி, மூன்று முடிச்சு விழுந்த பிறகுதான் ராஜேஷ் நிமிர்ந்தே பார்ப்பாராம். 'நீயா?' என்பாராம். நடக்கிற காரியமா?

உயிருக்குயிரான முதல் மனைவி கட்டாயமாகப் பிரிந்து போன பிறகு, அவள் இருக்கிறாளா, செத்தாளா என்று கூடப் பார்க்க மாட்டாராம். இரண்டாவது மனைவி மூலம்

# தாலி தானம்

கதையைச் சொல்ல ஆரம்பித்தால் சொல்லிக் கொண்டேஏஏஏஏ போகலாம். மூன்று (இல்லை நான்கா?) தலைமுறைக் கதை.

வேலைக்கு நடந்து போய்க் கொண்டிருந்த ராஜேஷ், லக்ஷ்மியைக் கல்யாணம் செய்து, படிப்படியாக சைக்கிள், ஸ்கூட்டர், கார், வீடு, சொந்த பிஸினஸ் என்று ராக்கெட் வேகத்தில் முன்னேறுகிறார். என்ன இருந்து என்ன? குழந்தை இல்லை — ரொம்ப நாளைக்கு! அப்புறம் லக்ஷ்மி கருத்தரித்து, நிறைமாதத்தில் விபத்தாகி, இருந்த குழந்தையும் போய், இனிமேல் குழந்தையே கிடையாது என்னும் இடி விழ, லக்ஷ்மியின் தங்க மனசு, புருஷனுக்கு இரண்டாவது கல்யாணம் செய்து வைக்க, புது மனைவி வந்த பிறகு புது மனைவியின் அம்மாவும் ஆமை போல் குடிவந்துவிட... எட்ஸெட்ராவை நேரமிருந்தால் வாருங்கள், பேசுவோம்!

லக்ஷ்மிக்கு லட்டு என்றால் லட்டு மாதிரியான ரோல். புருஷன், குழந்தை ஏக்கம், மூன்று குழந்தைகள். ஒன்றிற்குக் கல்யாணம் செய்கிற நேரத்தில் கூட முதல் மனைவிக்கு அழைப்பில்லையாம். ராஜேஷ், இப்படி அடிவேரே அசையும் காரெக்டரா உங்களுக்கு வந்து மாட்ட வேண்டும்?

அந்தக் கல்யாண நேரத்தில் புருஷன் பிஸினஸ் கவிழ்ந்து போய், கல்யாணம் நின்றுவிடும் அபாயத்தில் தன் வைரத்(!!) தாலியைக் கழற்றித் தானம் செய்து, லொக் லொக் என்று இருமி, உயிர்விட்டு... கொள்ளி வைக்கும் வரையில் கதையை நிறுத்த மனசில்லாமல் இழுத்துக் கொண்டே போகும் ஆர். சி. சக்தியின் மேல்...

சே பாவம், விட்டு விடுவோம்.

ஒய். ஜி. மகேந்திராவும், ஜெயஸ்ரீயும் நினைவில் நிற்கிறார்கள்.

எம். எஸ். வி. யின் இசை, மையக் கதையைப் போல உயிரில்லாமல் இருக்கிறது.

அழ வைத்து விடுகிறார்கள்!

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

# அறிமுகம் இதோ ஒரு மணிப் பயல்.

## பஜாஜ் காம்பேக்ட் வாஷிங் மெஷின். நாசூக்கான களைதுலங்கும் நன்மணி... இதற்கு நாங்கள் இட்ட பெயர்: மணிப் பயல்.



காம்பேக்ட் என்னென்ன வரங்களை வாரிவழங்குது பாருங்கள் வரிசையாக.

**ஸிங்கிள் பட்டன் கண்ட்ரோல்:** நவீனமிக்க CMOS மின் ஸர்க்யூட்—துணி வகைக்கேற்ப 1 முதல் 4 நிமிடங்கள் வரை, அலசி வெளுக்க 4 வித சுற்றோட்ட வகைகளை அமைத்துக் கொள்ள அனுமதிக்கிறது. பழங்கால பாணி டைமர்கள் இனி உமக்கில்லை.

**எதிர்கால நவீனக் களை:** சிட்டு வடிவிலே சிகரமான கட்டழகு இழையும் வாஷிங் மெஷினாக ஓங்கி விளங்குவது காம்பேக்ட் தான். குறைந்த இடத்தில் அடங்கிடும். எளிதில் நகர்த்த சரளமான உருள் சக்கரங்கள் பதிந்த மெஷின்.

**LED இயங்கு நிலைகாட்டி:** எலக்ட்ரிக் ஸெட்டிங் நிலையினைக் காட்டுகிறது ஆடியோ ஒலிச் சைகைகளோடு. சலவை முடிந்ததுமே அதனை அறிவிக்கிறது ஓர் அலாரம் ஓசை.

**திசை மாறிமாறிச் சுற்றும் வாஷர்:** அதிகத் துப்புரவான சுத்தமும், உயர்த்தியான சலவையும் பெற உதவுகிறது.

**திடவலு மிக்கது** காம்பேக்ட், ஸ்டைல் மிளிரும் வலுவான ஃபைபர்கிளாஸ் கட்டுமானம். உட்புறம்: அரிமான எதிர்ப்புள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தொட்டி.

**உள்நோக்கு வாகு: அக்ரிலிக் மூடி:** உட்புறம் நடக்கும் சலவையை நேரில் நீங்கள் பார்த்திடலாம்.

**நிறைவான சலவைத் திறம்:** காம்பேக்ட் சிற்றடக்கமாக இருப்பினும் எத்தனை துணிகளை வெளுக்கிறது பாருங்கள்: ஒரே வீச்சில் 1 புடவை, 2 ஷர்ட்டுகள், 1 ஜீன்ஸ், 1 ஷீட், 5 சிறு உருப்படிகள்.

**பேக்-அப் ஸ்விட்சு:** உங்கள் காம்பேக்ட் மெஷினின் எலக்ட்ரானிக் பேனலுக்கு எப்போதேனும் ரிப்பேர் தேவைப்பட்டால், மெஷின் வேலை தடைப்படாது. பேனலைக் கழற்றிப் பழுது திருத்தக் கொடுத்துவிட்டு, பிக்-அப் ஸ்விட்சைப் பயன்படுத்தி மெஷினைத் தொடர்ந்து இயக்கலாம். மறவாதீர், சிறியதே அழகு; சிக்கனமே செழிப்பு. முத்தான அழகோடு மூளை பலம். இத்தனை பெருமைகளும் உரிமையோடு பளிச்சிடும் எந்திரம் பஜாஜ் காம்பேக்ட்— இல்லத்தரசிக்கு மகத்தான நல்வரம்.



bajaj COMPACT

பஜாஜ் காம்பேக்ட் வாஷிங் மெஷின்

LINTAS BE P 1 2416 TM




**அடக்கமான சிறு வடிவம், அபார மூளைத்திறம், சலவைக்கு நல்வரம்.**

REGISTERED No. M. 4352
Registered as a Newspaper in Sri Lanka